# தமிழ்த்தோட்டத்தில் தெலுங்குக் குயில்கள்

(கவிதைத் தொகுப்பு)

சாந்தா தத்

டாக்டர் நலிமெல பாஸ்கர்

# பொருளடக்கம்


| தலைப்பு | பக்கம் |
|---|---|
| அனாதி - சௌபாக்யா | 13 |
| ரொட்டி - டாக்டர் என். கோபி | 15 |
| பஞ்சமவேதம் - சதீஷ் சந்தர் | 17 |
| தாளி தாங்கிவிட்டது - யாகூப் | 22 |
| பார்வைகள் - ஜயப்ரபா | 23 |
| மரணவாக்கு மூலம் - ஜிம்போ | 25 |
| அம்மாவின் புகைப்படம் - டாக்டர் சி. நாராயணரெட்டி | 27 |
| கூர்க்கா - என்ட்லூரிசுதாகர் | 29 |
| குஹளண்டம் - குண்டூர் சேஷேந்திரசர்மா | 32 |
| விளை நிலத்தில் பூக்கள் - நாகேஷ்வரம் சங்கரம் | 35 |
| நான்குபேர் சந்தித்தபோது - பாபினேனி சிவசங்கர் | 38 |
| சமையலறை - விமலா | 40 |
| ஏற்பாட்டு - ஆசாராஜு | 44 |
| ஏ காற்றே... வீசாதே - பூபால் | 48 |
| அப்பா - காஜா | 50 |
| நிந்திப்பு தேகம் - என்.ஆர். பல்லம் | 52 |
| பச்சை இதயம் - கொண்டேபூடி நிர்மலா | 54 |
| இதய காண்டம் - ஜ்வாலாமுகி | 57 |
| வார்த்தைகள் - வரவரராவ் | 58 |
| (கேபின்) நட்சத்திர ஆளுமை - வஜ்ஜலசிவகுமார் | 60 |
| கற்பனையிலிருந்து கற்பனைக்குள் - கே. சிவாரெட்டி | 62 |
| சாலை விபத்து - இஸ்மாயில் | 64 |
| காட்டுநிலா - சிவசங்கர் | 65 |
| 'வி' நாயக வம் - நிகிலேஷ்வர் | 66 |
| தலையாட்டும் அகல்விளக்கு - அப்சர் | 67 |
| பள்ளிக்கூடம் - சன்னபுரெட்டி வெங்கடராமிரெட்டி | 69 |
| பருவநிலைகள் - ஜோகண்ணு ஜகந்நாதராவ் | 71 |
| வண்ணங்களும் ராகங்களும் - பி. நரசிங்கராவ் | 73 |
| ஒரு காதல் கீதம் - ஸ்ரீ தர்பசயனம் ஸ்ரீனிவாசசார்யா | 74 |
| ஒரு குடையின் கதை - தேவிப்ரியா | 77 |
| மலைக்குழந்தைகள் - பீரம் சுந்தர்ராவ் | 79 |
| கத்திமுனையில் உடல் - அத்தேபல்லி ராம் மோகனராவ் | 81 |
| இளம் குருத்தின் இதயகீதம் - நந்தினி சித்தாரெட்டி | 83 |
| [illegible] - மஹிஜபீன் | 87 |

# அணிந்துரை

தமிழ்க் கவிதை வாசகனுக்கு ஸ்ரீஸ்ரீயின் கவிதைகளோடு நீண்டநாள் பரிச்சயம் உள்ளது.

தேசம் என்பது
மண் மட்டுமல்ல
மனிதர்களும்'

என்ற குருஜாடா அப்பாராவின் கவிதைகளில் முற்போக்கு எழுத்தாளர்கள் தங்களைப் பெரிதும் அடையாளம் கண்டிருக்கிறார்கள். கண்ணதாசனின் திரைப்படப் பாடல்களை இன்னொரு தெலுங்குப் பிரதி எடுக்கிற முயற்சிகளில் ஆத்ரேயா இங்கு அடையாளம் காணப் பட்டிருக்கிறார். முற்போக்கும் இடதுசாரித் தன்மையும், எளிமையும், பாட்டாளி மக்களின் உயர்ந்த குரலாகவும் திகம்பரக் கவிஞர்கள் செரபண்டராஜி, நிகிலேஷ்வர், ஜ்வாலாமுகி, வரவரராவ் என வெகுவாகக் கொண்டாடப் பட்ட காலம் இங்கிருந்தது. அப்போதைய 'வானம்பாடி' இயக்கத்தினரின் கவிதை முயற்சிகளோடு திகம்பரக் கவிகள் இயைந்தவர்களாய் இருந்திருக்கின்றனர். இடது சாரிகளால் அவர்களின் கவிதைகள் பெருமளவில் தமிழுக்கு மொழி பெயர்ப்பு செய்யப்பட்டன. செரபண்ட ராஜிவின் 'மலைகளையே பிளந்திட்டோம்', சி. நாராயண ரெட்டியின்

'மரக்குதிரை' ஆகியவை உடனடி ஞாபகத்திற்கு வருகின்றன. இயக்கச் செயல்பாடுகளின் மூலம் கத்தார் தொடர்ந்து தமிழ் இலக்கிய உலகிற்குள் அறியப்பட்ட வராகவே இருக்கிறார். சென்னை திரைப்படத்துறையின் தலைநகரமாய் இருப்பதால் வெகுஜன சினிமாக் கவிஞர்கள் வெகுவாகத் தென்படு கிறார்கள். 'இன்லெண்ட் லெட்டர் கதைகள்' போன்ற வடிவங்கள் தெலுங்கிலிருந்து வந்திருக் கின்றன. திகில் மற்றும் துப்பறியும் கதைகள் எண்டமூரி வீரேந்திரநாத்தின் முத்திரைகளோடு ஆயிரக்கணக்கான பக்கங்களுடன் உலா வருகின்றன. சமகால படைப்பாளிகளின் படைப்பு அறிமுகங்களில் NBT, சாகித்ய அகாதமி குறிப்பிடத் தக்க பணியைச் செய்து வருகிறது.

அரசு சாராத நிறுவனங்களின் முயற்சிகளின்றி தரமான இலக்கிய முயற்சிகள் அரிதாகிக் கொண்டு வருகின்றன.

தெலுங்கு கவிதை உலகம் பிற மேல்நாட்டு இலக்கியத் தாக்கங்களைத் தன்னுள் சுவீகரித்து விரிவாக்கம் பெற்று வருவது தெரிகிறது. எண்பதுகளுக்குப் பின்னால் தலித் இலக்கிய முயற்சிகளும், முஸ்லீம் சிறுபான்மையினரின் குரல்களும் தனித்துவமாய் வெளிப்பட்டிருக்கின்றன. மார்க்சிய விமர்சன முறைகளும், படைப்புகளும் மீறி மார்க்சியர்கள் நவீன இலக்கிய கொள்கைகளால் ஈர்க்கப்பட்டு படைப்பாக்கத்தில் ஈடுபட்டு வருகின்றனர். கே. பாலகோபால் போன்ற மார்க்சிய விமர்சகர்கள் பின் நவீனத்துவ ஈர்ப்பில் விமர்சனத்தை அணுகிவருகிறார்கள். தெலுங்கு விமர்சனங்களிடையே பின் நவீனத்துவ, பின் அமைப்பியல் - வாத முயற்சிகள் வலுப்பெற்று வருவதையும் அறிய முடிகிறது.

இச்சூழலில் இத்தொகுப்பு தெலுங்கு கவிதை உலகின் ஒரு பக்கத்தைக் கோடிடுகிறது. பெண்ணியக் கவிஞர்கள் ஜெயப்பிரபா, கொண்டே பூடி நிர்மலா, திரைப்படக் கலைஞர்கள் என்ற முத்திரையிலான பி. நரசிங்கராவ், பூபால்ரெட்டி, திகம்பரக் கவிகளின் முத்திரைகளோடு நிகிலேஷ்வர், சிவாரெட்டி, ஜ்வாலாமுகி போன்றோரும் விளிம்பு நிலை மக்களைப் பற்றியும், விரிவான தளங்களிலான முயற்சிகளோடும் பலரின் கவிதைகள் இடம் பெற்றிருக் கின்றன. 'ரொட்டி' போன்ற கவிதைகள் மனிதனின் வறுமைத் துயரை துல்லியமாக்குகின்றன. தலித் குரலும், முஸ்லீம் குமுறலும் வெளிப்பட்டிருக்கின்றன. உயர்ந்த தொழில்நுட்பம் மனிதனைக் குதறுவதையும், இன்னும் தாய்மை பெருமைக் குரிய விஷயமாக இருப்பதையும் கவிதைகள் கோடிடுகின்றன.

இத்தொகுப்பின் மொழிபெயர்ப்பில் ஈடுபட்ட சாந்தா தத் "தெலுங்கானா சொல்லும் கதைகள்" தொகுப்பு மூலம் தமிழ் இலக்கிய உலகில் சரியாக அறிமுகமாகி, அதற்குப் பின்னதான சிறந்த மொழிபெயர்ப்புகளின் மூலம் சிறந்த இலக்கியப் பணிகளைச் செய்து வருபவர். இவ் வாண்டில் வெளிவரவிருக்கும் அவரின் மொழிபெயர்ப்பி லான பி. நரசிங்கராவின் கவிதைத் தொகுப்பும், பூபால் ரெட்டியின் குழந்தைகள் பாடல் தொகுப்பும் தெலுங்கு இலக்கிய உலகைச் சரியாகப் பிரதிநிதித்துவப்படுத்து பவையாக அமையும்.

இத்தொகுப்பின் மூலகர்த்தா டாக்டர் நலிமெல பாஸ்கர் அவர்கள், தெலுங்கிலிருந்து தமிழுக்கும், தமிழிலிருந்து தெலுங்கிற்குமாகப் படைப்பிலக்கிய முயற்சியில் ஈடுபட்டு வருபவர். தெலுங்கு வாசனை வார்த்தைகளோடு மொழிபெயர்ப்பு செய்பவர். அரசு சார்ந்த

நிறுவனங்களின் மொழிபெயர்ப்புச் செயல்பாடுகளை மீறி, இலக்கிய அக்கறை கொண்ட நல்ல வாசக மனம் இவ்வகையான மொழி பெயர்ப்பு முயற்சிகளில் என்றைக்கும் முன்னின்று செயல் படுவதன் சரியான முன்னுதாரணம் நலி மெல பாஸ்கர். அதற்காக தமிழ் இலக்கிய உலகம் அவருக்குக் கடமைப் பட்டிருக்கிறது.

இத்தொகுப்பு நவீன தெலுங்குக் கவிதையின் ஒரு சில போக்குகளையும், முயற்சிகளின் முன்னுதாரணங்களையும் தமிழ் வாசகனுக்கு அறிமுகப்படுத்துவதில் வெற்றி பெற்றுள்ளது. வெகு சமீபத்திய நவீனக் கவிதைப் போக்குகளின் அடையாளமான ஒரு தொகுப்பை நலிமெல பாஸ்கர் கொண்டு வந்து, இந்த முயற்சியை முழுமையாக்க வேண்டும்.

– சுப்ரபாரதிமணியன்

# ஆசிரியர் உரை

தெலுங்கு படைப்பிலக்கியத்திற்கு ஆயிரமாண்டு சரித்திரம் உண்டு. கவிதை என்கிற நூதன வடிவத்திற்கு முதல் வித்திட்டவர் நன்னய்ய. மாபெரும் காவியம் மகாபாரதத்தை வடமொழியினின்று தெலுங்குக்குக் கொண்டுவந்த பெருமையும் இவருக்குண்டு. தொடர்ந்த காலகட்டத்தில் திக்கன, எர்ரன, போதன, வேமன, திலக், ஸ்ரீநாதுடு, ஸ்ரீஸ்ரீ, தாசரதி, குந்துர்த்தி, விசுவநாத், ஜாஷ்வா.... இப்படி எத்தனையோ மகாகவிஞர்களின் ஆளுமை தெலுங்குக் கவிதைத் தளத்தில் வேரூன்றியிருந்தது. இந்த மண்ணில் எத்தனையோ மாற்றங்கள் உயிர்த்திருக்கின்றன. புதுமைகள் நிகழ்ந் திருக்கின்றன. இவைகளுடன் வேற்றுமொழி இலக்கியங்களின் நவீனப் போக்குகளையும் உத்திகளையும் தளங்களையும் தன்மைகளையும்கூட ஆர்வமுடன் அங்கீகரித்துச் சிலாகிக்கும் ஆழ்ந்த இலக்கிய ரசனை ஆந்திர இலக்கிய வட்டத்தின் விசேஷச் சிறப்பு. இருபதாம் நூற்றாண்டில் ஆங்கில இலக்கியத் தாக்கம் காரணமாய் தெலுங்குக் கவிதைகளில் நவீனத்துவம் அதிக அளவில் இடம் பெறத்துவங்கியது. இந்த விஸ்தரிப்பின் தொடர்ச்சியாய் முற்போக்கு இலக்கியம் (Progressive) மற்றும் வர்க்கப் போராட்ட (revolution) வெளிப்பாடுகள் போன்றவை அரை நூற்றாண்டுக்கும் மேலாய் ஆதிக்கம் செலுத்தி வந்தன. இக்கொள்கைகள் பின்னணியிலான அம்சங்கள் தெலுங்குக் கவிதைத் தளத்திற்கு ஆழமான அஸ்திவாரமாக அமைய ஏதுவாகிவிட்டது.

அடுத்து.... 1980 காலகட்டத்தில் பெண்ணீயம் கவிதைகளின் உரத்த குரலாயிற்று. இத்துடன் தலித்தியம் என்ற இன்னொரு குரலும் இணைந்துகொள்ள... நூற்றுக்குத் தொண்ணூறு என்ற விகிதத்தில் இந்த அம்சங்களே கவிதைகளின் கருக்களாய் இருந்தன என்று திட்டவட்டமாய்ச் சொல்லமுடியும். இவை மட்டு மன்றி ஏகாதிபத்திய எதிர்ப்பு (anti-imperialistic) வெளிப்படையாக எதிரொலிக்கும் கவிதைகளும் அமோக வரவேற்பு பெற்றன. மைனாரிடி கவித்துவம் சமீபகாலத்தின் மற்றொரு புதுவரவு. பின் நவீனத்துவ (post modern) கவிதைகள் தெலுங்கு படைப் பிலக்கியத்தில் அவ்வளவாய் வளர்ச்சியடையவில்லை என்பதைச் சொல்லித்தான் ஆகவேண்டும். ஆனால் 'பாவ' கவிதைகள் (உணர்வியல்) தெலுங்கில் ஒரு தனி முத்திரை பதித்ததுபோல் வேறெந்த மொழியிலும் இருக்காதோ என்ற ஐயம் எழுவது தவிர்க்கவியலா விசேஷம். மிக நுணுக்கமான மன இயல்பு களையும் மயிலிறகால் வருடிக் கொடுப்பது போன்ற மென் உணர்வுகளையும் அருமையாய் வெளிப்படுத்தும் கவிதைகள் அன்றும் இன்றும் அநேகம். மொழிவளம்... சொல்லாடல் என எடுத்துக்கொண்டால் அந்தந்த வட்டார மண்வழக்கு, மைனாரிடிகளின் வார்த்தைப் பிரயோகம் ஆகியவை அதீத கவனத்துடன் கவிதைகளில் கையாளப்படுகின்றன... தேவையென வரும்போது மட்டுமே, கடந்த பதினைந்து இருபது வருடங்களில் கவிதைகளில் உள்ளடக்கத்துடன் வடிவமைப்பும் சிறப்பாக இருந்தாக வேண்டியதன் முக்கியத்துவம் உணரப்பட்டு அத்தன்மை யிலான கவிதைகள் வெகு ஆரோக்கியமாய் வெளிவந்து கொண்டிருக்கின்றன.

மேற்சொன்ன தளங்களில்... வடிவங்களில் கடந்த பதினைந் தாண்டுகளில் வெளிவந்த கவிதைகளை தமிழ் வாசகர்களுக்கு அறிமுகப்படுத்தும் எம் அளவற்ற ஆர்வத்தின் விளைச்சல்தான் இக்கவிதைத்தொகுப்பு. தெலுங்குக் கவிதைகளின் இன்றைய அத்தனை போக்குகளுக்கும் (trend) இந்நூல் ஒரு முன்னிறுத்தல்

என்று கொள்ள முடியாதுதான். ஆனால் எமது கவனத்தில் வந்தவைகளுள் கூடுமான வரை சமகால கவிதைப் போக்கிற்கு அருகாமையிலுள்ள சில கவிதைகளை அறிமுகப்படுத்துவதுடன் தெலுங்குப் படைப்பிலக்கியத்தில் பரவலாய் வியாபித்துள்ள நவீன கவித்துவத்தின் முக்கியத்துவத்தை வெளி உலகிற்கு அடையாளப் படுத்துவதே எம் முதன்மை நோக்கம்.

இம் முயற்சியைப் பொருத்தவரை முன்கூட்டியே திட்ட மிடுதல் என்று எதுவுமில்லை. எங்களுக்கு மிகவும் பிடித்த கவிதை களை.. மொழியாக்கத்திற்கு வளைந்து கொடுக்கக்கூடியவை என்று மனதில் பட்ட படைப்புகளை.... 1985-99 காலநிர்ணயித்திற்குட்பட்ட கவிதைகளைத் தேர்ந்தெடுத்துக்கொண்டு பணியைத் துவங்கி னோம். இந்த ஆரம்ப முயற்சியில் வேறு சில அம்சங்கள், பாணி களைச் சார்ந்த கவிதைகள் விட்டுப் போயிருக்கலாம். இன்னும் பல முன்னணிக் கவிஞர்கள் இந்நூலில் தென்படாமல் இருக்கலாம். எவரையும் எந்தப் படைப்பையும் குறைத்து மதிப்பிடுவது எம் நோக்கமல்ல. எந்த 'இஸம்'களையும் (வாதங்கள்) ஒதுக்கி வைக்கவும் எண்ணமில்லை. எமது அடுத்த முயற்சியில் அத்தனை பரிமாணங்களையும் சமவிகிதத்தில் மொழியாக்கத்தில் கொண்டு வர முனைவோம்.

தெலுங்குக்குயில்களின் பாடல்கள் தமிழ் நந்தவனங்கள் தோறும் ஒலிக்கும் வகையில் தமிழ் நெஞ்சங்களின் ஆதரவையும் வரவேற்பையும் கோரியபடி.....,

சாந்தா தத் டாக்டர் நலிமெல பாஸ்கர்

# நன்றியுடன் நான்கு வார்த்தைகள்....

கடந்த பதினைந்தாண்டில் வெளிவந்த தெலுங்குக் கவிதைகளைத் தமிழில் கொண்டுவரும் அரிய யோசனையை எம்முள் விளைவித்த நண்பரும் பிரபல கவிஞருமான ஜோகண்டி ஜகந்நாதத்திற்கு—

கவிதைகளை மொழியாக்கம் செய்ய அனுமதியளித்த கவிஞர்களுக்கு—

இந்நூல் முடிக்கும்வரை தொலைபேசியிலும் நேரிலுமாய் இடையறாது ஊக்கமளித்துக்கொண்டிருந்த நண்பரும் பிரபல சினிமா கிரிடிக்குமான வரால ஆனந்திற்கு—

ஆண்டாண்டுகாலமாய் அநேக பிறமொழி நூல்களை எங்களிடம் சேர்த்தபடி வெகுவாய் ஆதரவு தந்துகொண்டிருக்கும் நிஜாம் வெங்கடேசம் சாருக்கு—

பிரபல திரைப்பட இயக்குநர் பி. நரசிங்கராவ், திரைத் துறையிலும் படைப்பிலக்கியத்திலும் தனக்கென ஓர் தனி இடம்பெற்றுள்ள பூபால், இலக்கிய நண்பர்கள் தர்ப்பசயனம் ஸ்ரீனிவாசா சார்யா, பி.எஸ். ரவீந்தர் ஆகியோருக்கு—

எமது பணிக்கு முழு ஆதரவும் அனுசரணையும் காட்டி உற்சாகப்படுத்திய நலிமெல சாவித்திரி, சைதன்யா, சரிதா மற்றும் மற்ற உறவுகளுக்கும் நண்பர்களுக்கும்—

ஆங்காங்கே சிதறியிருந்த கவிதை முத்துக்களை ஒன்று திரட்டி ஒரு அழகான மாலையாய்க் கோர்த்த மணிமேகலைப் பிரசுரத்திற்கு...

அதிமுக்கியமாய்... தம் மேலான அணிந்துரை மூலம் நூலின் சிறப்புக்கு மேலும் கனம் கூட்டிய முன்னாள் ஜனாதிபதி மூலம் 'கதா' விருதும் இந்நாள் தமிழக முதல்வர் மூலம் தம் 'சாயத்தினர்' நாவலுக்கான தமிழ்நாடு அரசு விருதும் இன்னும் அநேக விருதுகளும் சிறப்புகளும் பெற்று தமிழ் இலக்கிய தளத்தில் தமக்கென ஒரு சிறந்த அங்கீகாரம் அடைந்துள்ள நண்பர் திரு. சுப்ரபாரதி மணியன் அவர்களுக்கு....

நன்றி! நன்றி!

# தமிழ்த்தோட்டத்தில் தெலுங்குக் குயில்கள்

## அ·க·ர·ா·தி

**சௌபாக்யா**

ஒவ்வொரு அறையாய்த் திறக்கும் போதெல்லாம்
புராதனப் பரிமளம் குப்பென வீசுகிறது
புது நட்சத்திரக் கூட்டம் நகர்ந்து செல்வதுபோல்
லட்சக்கணக்கான லாந்தர்கள் ஒளியிறைத்தபடி
செல்கின்றன
கேள்வியே கணத்தில் விடையாய் உருமாறும்
அற்புதக்காட்சியைப் பார்த்து பரவசத்தால் மெய்சிலிர்த்து
நடந்தபடி நாம்...

திறந்து கொண்டிருக்கும் துவாரங்களினூடே
போய்க்கொண்டே இருப்போம்
நில மாளிகையில் பீப்பாய்களில் நிறைந்த திராட்சை ரசம்
துவர்ப்பு மணம் வெளிப்படுத்துகிறது
காலமெல்லாம் விகசிக்கும் இந்த தோட்டத்திற்கு
எல்லாத் திசைகளிலும் பாதைகள்தாம்!

எங்கேயோ இணைப்பு அறுந்துவிட்டது
நாம் காயமடைந்த பாடலொன்றைத்
தோளில் சுமந்து இங்கு வருவோம்
திக்கெட்டும் வியாபித்த இம் மரத்தடியில்
திகிலுடன் நின்றபடி திசையெங்கும் பார்க்கிறோம்.

ரஸவாத கணத்தில் பாட்டின் சோகத்தைக் கரைக்கிறது
மரத்தின் கருவினுள் நிச்சிந்தையாய் நடந்து செல்வோம்
நாம் சொல் ஒன்றின் முன் நின்று விசாரிப்போம்.

முத்துச்சிப்பியொன்று மெல்ல கண்திறந்து
நமக்கு ஓர் அழகான முத்து தரும்
இருள் கவிந்த பள்ளத்தாக்கில்
உரக்கக் கத்துவோம்
எதிரொலித்துக்கொண்டு ஒளிரும் டார்ச்லைட்
ஒளிக்குவியலில்
நமக்கு ஒரு வழி பிறக்கும்!

இங்கு ஆகாயத்தை அசைக்கும் போதெல்லாம்
மழை பெய்கிறது
மூங்கில்கள், வன மூலிகைகள் நிறைந்த இக்காட்டில்
வழி தவறி அலைவதற்காய் மனம் விழைகிறது!

தனியாய் கண்போன போக்கில் சென்று
நாலுக்கு குறைந்தபட்சம் நூறு குழந்தைகளுடன்
பிரபஞ்சத்திற்கு திரும்பி வருகிறோம்
பிரவாகித்து ஓடும் நதியில் புனித ஸ்நானம்
செய்கின்றோம்!

இந்த மாயப்பல்லக்கேறி உலகம் சுற்றிவருபவர் எத்தனை
பேரோ?
இந்த மதுவருந்தி மயக்கத்தில் மூழ்கியவர் எத்தனை பேரோ?
இந்த ஆகாயமெங்கும் சாவிக் கொத்துக்களே!
இந்த ஆகாயமெங்கும் வாந்தர் கொத்துக்களே!

# ரொட்டி

டாக்டர் என். கோபி

ரொட்டி வானத்திலிருந்து வழுக்கி விழாது
பூமிக்கருவறையினின்று
வியர்வைத் துளிகள் சுமந்து வந்த
பசிக்கனவு ரொட்டி!

இது விளைநிலங்களின் ராகத்திற்கு
கைகள் போடும் தாளத்திலிருந்து
நடந்து வந்த ஒளிச் சக்கரம்
பொழுது புலர்வதென்பது
எங்கள் வீட்டில் ரொட்டிச்சூரியன் உதயமாவதுதான்!

மாவு ஐந்து விரல் சந்துகளை அலங்கரித்தபடி
உள்ளங்கை ரேகைகளை அன்பாக முத்தமிட்டபடி செய்யும்
சிரமஸ்பரிச சித்தாந்தம் ரொட்டி!

பிசைகிறபோது
எந்த மடிப்பு எந்த வடிவெடுக்குமோ
புரிந்துகொண்டு மாயமாகும்
பல அசைவுகளின் பலன் ரொட்டி!

அம்மா மாவு பிசைகிற போது
அவள் தன் கைகளால்
எங்கள் வயிற்றை வருடிக் கொடுப்பது போலிருக்கும்!

ரொட்டி கல்லை அடைந்ததும்
அத்தனை பேரும் அம்மாவைச் சுற்றி உட்காருவோம்
அம்மா ரொட்டி சுடுகிறபோது
மிகுந்த கவனத்துடன் அதன்மீது
அன்பெனும் மகா காவியத்தைப் படைப்பது போலிருக்கும்
அவ்வப்போது ரொட்டி மீது தண்ணீருடன் கண்ணீரும்
உதிரும்

எங்களுக்கு அதேதும் தெரியாது
ரொட்டி என்றால் எங்களுக்கு ரொட்டி மட்டுமே!

ரொட்டி மீது அ, ஆ பழகினோம்
ரொட்டியை இன்று எங்கள் தலை மீது
சூரியனாய்த் தரித்தோம்!

# பஞ்சம வேதம்

சதீஷ் சந்தர்

நூறு வருடங்களுக்கு பதினேழு மதிப்பெண் மட்டுமே
போட்டு வாழ்க்கையில் தவறிவிட்ட குருதேவர்களுக்கு
கைகூப்பி எழுதுவது....

'செத்தாலும் உனக்கு மண்டையில் ஏறாதுடா...' என்று
நீங்கள் திட்டியபடி சொல்லித்தந்த விரல்கணக்கு
எனக்கு செத்தபிறகுதான் புரிந்தது
எத்தனைமுறை எண்ணினாலும்
என் கையில் நான்குவிரல்களே இருந்தன
அப்பாவிற்குக்கூட ஐந்தாம் விரல் இல்லாததால்தான்!

நீங்கள் ஜீரோக்கள் நிரப்பிய புரோக்ரஸ் ரிப்போர்ட்டில்
எப்போதுமே விரல் முத்திரை வைத்ததில்லை
முலாம்பழம் போன்ற நிலாநாளில்கூட
அவ்விரல் இல்லாததால்தான்
அம்மா சோறு ஊட்டியதில்லை!

நான் அறியாமையுடன் விழிக்கும்போதெல்லாம்
நீங்கள் என்னென்னவோ அமிர்தபாஷையில் திட்டுவீர்கள்
எனக்கு அன்னம் தவிர அமிர்தம் பிடிக்காது
உண்மை சொல்லுங்கள்
பஞ்சமன் என்றால் ஐந்தாம் விரலற்றவன்
என்றுதானே அர்த்தம்!
எங்கள் முப்பாட்டன் ஏகலைவன் சொன்னான்.

உங்களுக்கு ஃபீஸ் கொடுக்காமலே செத்துப்போனதற்கு
மன்னிக்கவும்.

என்ன கொடுப்பது?

உயிரையே தரலாமென்றால்
இதுவரை உன் உடலில் தலை புதைந்து அழுக்காகிவிட்டது
அதுவுமன்றி விரும்பினால் தலை குளிக்கும் வியாதி
உங்களுக்கு?

போகட்டும்...
அதிமென்மையான என் மனப்படிமத்தைத் தரலாமென்றால்
என் மரணம் உங்களுக்கு வந்துவிடும்!

எப்படி யோசித்தாலும் என்திருஷ்டி பொம்மை கொடுப்பதே
நியாயமெனத் தோன்றுகிறது
எந்த காந்திஜயந்தியன்றோ நீங்கள் செய்கிற
சமபந்தி போஜனத்தில்
திருஷ்டி விழாது காப்பாற்றும்!

ஏகலைவன்கூட
மகாபாரதத்தில் ஓர் திருஷ்டிபொம்மைதான்!

எங்கள் வகுப்பில் பாண்டவரையும் கௌரவரையும்
விசாரித்ததாய்ச் சொல்லுங்கள்
புது 'கேஸ்ட் 'சர்டிபிகேட்'டுடன்
வகுப்பில் சேர்ந்த கர்ணனுக்கு
என் அனுதாபங்களைத் தெரிவிக்கவும்!

அவர்கள் கெட்டிக்காரர்கள்
உங்கள் ஸ்லோகங்களுக்குக் கைதட்டுபவர்கள்

எனக்கு மட்டும் அவை வசவுகள்போல்தாம் கேட்கும்
நிஜம் சொல்வதென்றால்
மனுதர்மங்கள் வாத்ஸாயன காமசூத்திரங்கள் போல்
செவியில் விழும்!
தெய்வத்தின் நான்கு சரீரமர்மங்கள்
அசிங்கச் சித்திரங்களாய்த் தென்படும்!

என் பிறப்பு ரகசியத்தை உங்கள் சாஸ்திரங்களில்
எழுதாததற்கு என்றென்றும் கடமைப்பட்டிருக்கிறேன்
என்னை அவமதிக்க உங்கள் நிகண்டுகளில்
வசவு வார்த்தைகள் கிடைக்காத போதெல்லாம்
என் அம்மாவைக்குறித்துதான் உம் நாக்குகள் பேசும்
போகட்டும்... தூஷணைகளிலாவது என் அம்மாவுக்கே
நான் பிறந்தவனென ஒப்புக்கொண்டுள்ளீர்கள்!

கண்டிப்பாய் நாங்கள் தாய்க்குப் பிறந்த பிள்ளைகள்தாம்
அம்மாதான் எங்கள் தெய்வம்
பெரியமனிதர்கள் தள்ளிவைத்த குந்தியம்மாகூட
எங்கள் வீடுவந்தால் குலதெய்வமாக்கி பூஜை செய்வோம்!

ஏகலைவன்கூட தெய்வங்களுக்கன்றி
தாய்க்குப் பிறந்தவன்தான்!

என்னைக்
கொளுத்தியது கெரோசின் அல்ல
தன்மானம்தான் என பத்திரிகையாளர்களிடம்
சொல்லுங்கள்!

நெருப்பில் எரிந்தபோது என் உடம்பே
எனக்கு துர்நாற்றமடித்தது
அச்சாய் வாழ்ந்துகொண்டிருக்கும் உங்களிடமிருந்து வீசும்
நாற்றம்!

அப்போதுதான் புரிந்தது சார்
உங்களுக்கும் எனக்குமுள்ள வித்தியாசம்
குலம் பற்றவைக்காமலே நாற்றமடிக்கும் இல்லையா...?

உங்களைக்கொன்றாலும் பாவமில்லையென
எங்களவர்கள் சொல்கிறார்கள்
உண்மையில் நீங்கள் உயிர்வாழ்ந்ததெப்போது?

உயிருடனிருந்தும் தன் பிண்டங்களைத்தானே
தின்பவன்...!
நீங்கள் என்னைப் பார்த்து ஏளனமாய்ச் சிரிக்கும்
போதெல்லாம்
மண்டையோட்டின் விகாரப்பற்கள் தெரியும்!

ஏகலைவன் மாவீரன்
சவங்களைக் கொல்லமாட்டான்!

கடைசியாக ஒரு வார்த்தை
என் இறுதியாத்திரையில் கலந்துகொண்ட
சகுனிமாமாக்களுக்கு நன்றிசொல்லுங்கள்
அவர்கள் கண்ணீர்த்தாரைகளால் ஊரெங்கும்
வெள்ளமாமே!

நான் கவனித்துக்கொண்டுதானிருக்கிறேன்
அவர்கள் அழுகை முகங்களின் ஒப்பனை கலைந்துபோய்

புலிவேஷம் வெளிப்பட்டுவிட்டது
அவர்கள் அஞ்சலி உரைகள் முழுக்க
ஓட்டுப்பெட்டிகளின் புழுக்கை நாற்றம்
ஆனாலும் அவர்கள் எனக்கு உபகாரம்தான்
செய்திருக்கிறார்கள்
என் சஜீவ தகனத்திற்கு
ரேஷன்கார்டில் கெரோசின் சப்ளைசெய்தது அவர்கள்தாம்!

நாளை சுடுகாட்டில் ஏகலைவன்
அவர்களை இலவசமாய் எரித்து
என் கடன் தீர்த்துக்கொள்வான்!

(ஆசிரியர்களின் ஜாதிவெறிக்குப் பலியான மாணவர்களான தாகெ பாலாஜி மற்றும் டொக்கா பத்மநாபராவுக்கு.)

# தூளி தூங்கிவிட்டது

**யாகூப்**

இந்தத் தூக்கம் எனக்கான சாபம்!

ஊகத்தூரிகையில் தூளி நிற்கவில்லை
தொண்டையில் சத்தம் எழவில்லை
எங்கிருந்தோ முழுக்க முக்காடிட்டு
சின்னப் பாதங்களால் நடைப்படிகளேறி
சிறுநகை பொழிந்தபடி
ஓர் காவநட்சத்திரமாய் உதிர்ந்தேன்
என் அடிச்சத்தம் கேட்டு
ஆகாயம் சிரித்துக்கொண்டது வெறுமையாய்!

என் வருகைக்காய் எதிர்பார்த்து பார்த்து
பார்வையில் கத்திகள் பதித்துக்கொண்டாய்
ஒன்பது மாதக் கனவுகளை வயிற்றுள் புதைத்துவைத்தாய்
ஆனால், இப்பூமி என்னை மற்றொரு காலத்திற்குத் தள்ளி
விட்டது

ஒன்பதாம் பிறை உதிர்ந்துவிட்டது
ஆழ்ந்த நித்திரையில் எத்தனையோ கனவுமின்னல்கள்

அம்மா... தூளியை ஆட்டாதே
எனக்கு தூக்கம் வருகிறது
இந்த ஜன்மத்தில் விடைபெறுகிறேன்
வரட்டுமா...?

# பார்வைகள்

**ஜயப்ரபா**

இரு விழிகளினின்று
பார்வைகள்
ஊசிகளாய் ஊடுருவி
மாமிச உருண்டைகள் மீது
உலவியபடி எக் கட்டுப்பாடுமற்று
மேய்ந்துகொண்டிருக்கும்.

பார்வைகள் எப்போதும் முகத்தினுள் பார்க்காது
வார்த்தைகள் எப்போதும் இதயத்தினின்று பிறக்காது
கண்ணில் படும்போதெல்லாம்
அருவெறுப்பூட்டுவதாய்
உடல் மீது
பார்வைகள் செல்லரித்தாற்போல் படர்ந்தபடி....

அவ் விழிகளில்
லட்ச வர்க்கங்கள் இருக்கின்றன
ஆனால் பார்வைகளுக்கு மட்டும் வர்க்க
வேறுபாடுகளில்லை.

அப் பார்வைகளில் எப்போதும்
ஒரே சங்கேதம் தான்
எச்சிலொழுகும் நாயின் பசி...
விகாரமான கரடியின் அசுரப்பிடி போன்ற ஏதோ ஒன்று
விடாமல் கனவுகளிலும் துரத்திக் கொண்டிருக்கும்.

இந்த அடர்ந்த காட்டுக்குள்
வெளிச்சத்திற்கும் இருளுக்கும்
வித்தியாசமிருக்காது
பார்வைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள
சாலைகளில்
பேருந்துகளில் வகுப்புகளில்
வைக்கும் ஒவ்வொரு அடி பின்னும்
உடலின் ஏதோ ஒரு அங்கத்தை காயப்படுத்திய
அந்த நஞ்சுப் பார்வைகள் குதறிக்கொண்டிருக்கும்.

ஓரோர் சமயம்
தொலைதூர வானத்திற்குள்ளும் சூன்யத்திற்குள்ளும்
மாயமாய் மறைந்துபோக வேண்டுமென விருப்பம்-ஆனால்
ஓடிப் போவது தீர்வு அல்ல என
அந்த விஷப் பார்வைகளை எதிர்க்கும்
முட்கள் போன்ற கூர்மையை
என் விழிகளுக்குக் கற்றுக்கொடுக்கத் துவங்கினேன்.

இப்போது அக்கண்களைத் துரத்தியடிக்க
கண்களாலேயே யுத்தம்...
எண்ணி இரு கணங்கள் நேருக்கு நேர்
என் கண்களுக்குள் பார்க்கமுடியாத கோழைப் பார்வைகள்
பாதாளத்திற்குள் ஓடுகின்றன.

அப்போது மனதில் வந்தது...
கண்களுக்கே அல்ல
இந்த நாட்டின் பெண்களுக்கு
உடலெல்லாம் முட்கள் இருக்கும் நாள்
எந்நாளோ என...

# மரண வாக்குமூலம்

**ஜிம்போ**

நீதிபதி அவர்களே!
என் உடம்பைப் போலவே சுண்ணாம்பு உதிர்ந்து போன
இந்த ஆஸ்பத்திரிச் சுவர்கள் சாட்சியாக
டயர் எரிந்த நாற்றம் வீசும் என் உடம்பு சாட்சியாக
அடிபிடித்த வாணலி போல் கருகிப் போன
என் முகம் சாட்சியாக
என்னைப் போல் இம்சைகள், வேதனைகள் எத்தனையோ
பார்த்த
இந்த ஆஸ்பத்திரி கட்டில் சாட்சியாக
என் பிள்ளைகளின் வெகுளிப் பார்வைகள் போன்ற
இந்த சலைன் பாட்டில் சாட்சியாக
எரிந்து போன இப் புடவைக்கந்தல் போன்ற
என் வாழ்க்கை சாட்சியாக
இந்த வாக்குமூலம் கொடுக்கிறேன்
எழுதிக்கொள்ளுங்கள்
என் மரண வாக்கு மூலம்!

என் புருஷன் எப்போதும் என்னைப்
புத்தகங்களிடைப் பூவாய் பார்த்துக் கொண்டானே தவிர
வாடிய பூமாலையாய் வீசி யெறிந்ததில்லை!
தன்னுடைய உதடுகளால்
என் கன்னங்களைச் சிவப்பேற்றினானே தவிர
சிகரெட்டால் எந்நாளும் சிவப்பேற்றவில்லை!

பர்னால் பார்வையாய்த்தான் பார்த்தானே தவிர
பர்னாலின் தேவை எப்போதும் ஏற்படுத்தியதில்லை!
வரதட்சணைக்காக
எப்போதும் என்னை சிகரெட்டாய் கசக்கியதில்லை
சிகரெட் சாம்பலை உதறும் விதமாய்
என்றும் என்னை உதறியதில்லை!

இரவில் செய்திகள் முடிவடைந்த பின்
சமையல் செய்கிறபோது
நெருப்பு என் நைலக்ஸ் புடவையில்
என் அலட்சியத்தால்தான் பற்றிக்கொண்டதே தவிர
வேறெவரும் காரணமல்ல
அணைப்பதற்கு என் மீது தண்ணீர் ஊற்ற
வீட்டில் யாருமே இல்லை
டி.வி. முன்னால் குழந்தைகள் தவிர...

எப்படியும் என் வாழ்க்கை
இறக்கைகள் பிய்க்கப்பட்ட கோழியாகிவிட்டது
'போசம்மா' கோவில் முன்
கட்டிப்போட்ட ஆட்டுக்குட்டியாகிவிட்டது
என் கண்ணம்மாவிற்கும் என் சின்னாவிற்கும்
இவ்விதமாய் தீப்பிடிக்கக் கூடாதென
அவர்களிடம் நீங்கள் இதுபோல் வரக்கூடாதென
இந்த வாக்குமூலம் கொடுக்கிறேன்
இதைத் தவிர இனி ஒன்றுமில்லை சொல்வதற்கு!

3480D



# அம்மாவின் புகைப்படம்

**டாக்டர் சி. நாராயணரெட்டி**

என் அம்மா போகிற போக்கில்
தன் போட்டோ கொடுத்துப்போகவில்லை.
அசல் போட்டோ எடுத்திருந்தால் அல்லவா
கொடுப்பதற்கு?

'அம்மா! ஒரு போட்டோ எடுத்துக்க' என்றால்
முத்து தெறித்தாற்போல் சிரிப்பாள்
'நீயே என் படம் தானே அப்பா' என்று..
என்னைத் தன்னுடன் அணைத்துக்கொள்ளும்போது
வானமே என்னுள் அடங்கிவிட்டாற் போல்
உவகை பூக்கும்.

அம்மா உருவத்தைப் பத்திரப்படுத்திய
தங்க ப்ரேம்கள் நாங்கள் என
நேற்றுவரை என் கண்கள் இறுமாந்திருந்தன
இப்போது எப்படியும் கண் முன் அம்மா இல்லை
கண் மூடிப் பார்த்தால் அம்மா வடிவம்
கலங்கலாய்த் தெரிகிறது!

மழைத்துளிகள் தெறித்த வண்ணப்படம் போல்
எஞ்சியுள்ள அந்த அரைகுறைத் தோற்றமும்
அழிந்துபோய்விட்டால்?
கலவரம் மேலிட நெஞ்சு படபடக்கிறது
காலையில் கண் விழித்தபோது

என் கண்களில் குளித்து தலை ஆற்றிக் கொள்ளும்
அம்மா உருவம் மங்கலாகி வருகிறதா?

உதிக்கும் சூரியனுள் இருக்கிறதோ என்னவோ
என்னை எழுப்பிய அம்மாவின் தோற்றம்...?
வாசலில் வெண்ணிலா காட்டி எனக்கு
தாலாட்டு பாடிய போது
அம்மா படத்தை எடுத்திருப்பானோ அந்த சந்திரன்
அவனுள் இருப்பது அம்மா போட்டோவோ என்னவோ?

நட்சத்திரங்கள் என் தோள் தட்டிச் சொல்கின்றன...
தம் கண்கள் அத்தனையும் அம்மாவின் அடையாளங்கள்
என்று
அழகான பிரமையிலிருந்து விடுபட்டு
நெடுமூச்செறிந்து...

அம்மா உருவம் வரைய நினைத்தேன்
அப்போது தெரிந்தது எனக்கு
நான் ஓர் ஓவியன் அல்ல என்பது
எவ்வளவு அசைத்தாலும் பேனா தூரிகை ஆகுமா?
சொற்கள் கோடுகள் ஆகுமா?
உணர்ச்சிகள் வண்ணங்களாகுமா?

கவிஞன் என்ற திமிர் இமய மலைச் சரிவாய்
உடைந்து விழுந்தது.
சிதில சிதிலங்கலாய்ப் பிரியும் ஞாபக முத்திரை
இதயச் சட்டத்தில் பொத்திக்கொண்டு...
அம்மா உருவத்தைத் தக்கவைத்துக்கொள்கிறேன்
பிறவி மூலத்தைப் பத்திரப்படுத்திக் கொள்கிறேன்.

# ஃபேர்க்கா

## என்ட்ரூரி சுதாகர்

அவன் ஒரு இரவுச்சூரியன்
விழிவளைவுகளில் உறக்கப் பாயை மடித்துவைத்து
திருட்டு இருட்டைத் துரத்திக்கொண்டிருப்பான்
தெருமுனையினின்றே அவன் அடிச்சத்தங்களை
மோப்பம் பிடித்துவிடும் தெருநாய்கள்
மரியாதையாய் எழுந்துநின் று வாலாட்டும்!

எங்கிருந்து வந்தவனோ தெரியாதெனி னும்
நெஞ்சுக்கு நெருங்கியவன் போலிருப்பான்
தலையில் கத்திகள் கைகுலுக்கும் சின்னம்பொறித்த
கம்பளித்தொப்பி
இடுப்பில் பரம்பரைக் கூர்வாள்
அழுக்கான முரட்டுக்காக்கியுடை என
மரியாதைத் தோற்றத்துடன் கம்பீரமாய்த் தெரிவான்!

காபிராக ஆலாபனை வேளையில்
கால்நடை துவங்கி பூபாள நேரத்தில்
காவல்கச்சேரி முடித்துக்கொள்வான்
விடிவெள்ளி முளைத்த அடையாளமாய்
பீடித்துண்டு ஓய்வாய் புகைவிட்டுக்கொண்டிருக்கும்!

ஆறு ருதுக்களின் சிநேகிதனவன்
காலம் அவன் கரத்திலுள்ள டார்ச்லைட்
மந்திரக்கோல் போன்ற அவன் தடியோசை
நம் பயஜுரம் தணிக்கும் மருந்தாகிறது!

நள்ளிரவில் கேட்டைத்தட்டி உறக்கம் கலைத்தாலும்
மலையளவு தைரியத்தை துண்டு அறிக்கைகளாய்
பகிர்ந்து செல்வான்
நடுச்சாமம் அவன் வந்துசென்ற அடையாளம்
பூட்டுகள் பெருமிதத்துடன் கதவுமீசையை
முறுக்கிக்கொள்ளும்!
நாமெல்லாம் ஆழ்நித்திரையில் குறட்டை விடுகையில்
ஒற்றை ஓடமாய் விழிப்பு அலைகள் மேல் நடந்து
கொண்டிருப்பான்!

மனைவி தன்காதலை விரல்கள், ஊசிகளில் நிரப்பி
பின்னிய ஸ்வெட்டர் வெப்பமான கவசமாய்
ஒட்டிக்கொள்ள..
ஒவ்வொரு இரவும் விடியற்காலையும்
ஆயிரம் முத்தங்களும் ஆலிங்கனங்களும்
சுடுமூச்சுகளும் கெஞ்சலும் கொஞ்சலுமான ரகசிய
ஒலிகளூடே
துறவு பூணாச் சந்நியாசியாய் நடந்துகொண்டிருப்பான்
நள்ளிரவில் மனைவி மக்களைவிட்டு
ஒவ்வொரு இரவும் கௌதம புத்தர் அவதாரம்...

குளிர்கால இரவுகளில் மூடியகடைகள் முன்
துக்கத் துணுக்குகளான பிச்சைக்காரர்களை
வராந்தாக்களில் எறியப்பட்ட
வயோதிகப் பெற்றோர் முனகல்களை
மருத்துவமனை ஜன்னல்களுக்கப்பால்
கெட்ட கனவுகள் காணும் முதிர்நோயாளிகளை
பனிபெய்யும் மரத்தடிகளில் குளிர்காயும் குஷ்டரோகிகளை
மோகம் பீடித்த காமுகர்களுக்காக
பசிக்கண்களுடன் காத்திருக்கும் விபச்சாரிகளை...
விதவிதமான சுகதுக்கக்காட்சிகளைக் கண்டபடி
ஒப்பற்ற கவிஞனாய் ஏதோ யோசித்தபடி

நீர்மேல் நடந்த ஏசுபிரான்போல்
கண்ணீரில் நடந்துசெல்கிறான்!

சுகவீனத்தால் அவன் வராத இரவுகளில்
ஆகாய நட்சத்திரங்களும் அநாதை நாய்களும்
இருட்டில் கண்ணீர் வடிப்பது போன்ற அமைதி!

அவன் சம்பளம் யாருக்கும் தெரியாது
அவன் வாழ்க்கைப் பின்னணி எவருமறியார்
தன் ஓட்டுவீடுதவிர ஊரின் அத்தனை வீடுகளுக்கும்
காவல்காப்பான்!

நமக்கு சம்பளம்வரும் நாளன்று
தன் 'பக்ஷீஸ்' பையை விரித்தபடி செல்வான்
ரூபாய் நாணயமோ இரண்டு ரூபாய் நோட்டோ போதும்
தலைகுனிந்து வணங்கி
சலாம்சாப் என்றபடி பணிவுடன் கடக்கையில்
அவன் பாக்கெட் கிணற்றினின்று சில்லறைக்குரல்கள்
வேதனையுடன் முனகுகின்றன!

*பக்ஷீஸ் - டிப்ஸ்

# ருது காண்டம்

**குண்டூர் சேஷேந்திரசர்மா**

காயும் இந்த சித்திரை நிழல்களடியில்
பூக்கள் தரும் ஒரு தம்ளர்
பானத்தைக் குடிக்கட்டும்
இம் முதல் மாதத்தின் பன்னீர்ச்சாரல்களில்
அமிழ்ந்து குளிக்கட்டும்
இப் பூக்களையெல்லாம் இழந்துவிட்டேன்
என் சோகங்களில்
பாடல்களை உதிர்த்து விட்டேன்
என் கண்ணீர்த் துளிகளில்
எடுத்துக்கொள்ளட்டும் சில பரிமளங்களையாவது
நான் இங்கு ஒரு மகரந்தப்பொடியாய்
காற்றில் கலந்து போகட்டும்
உன் ஆள்காட்டி விரலேறி
ஒரு பூவாய் மாறிப் போகட்டும்.

இந் நதிகள் இம் மலைகள் இந்நாடு யாருடையது
வேலை செய்யும் கூலியில் வயிறு
நிரப்புகிறவர்களுடையது
இத்தேசத் தெருக்களில் நடக்கும் உரிமை யாருடையது
வியர்வைத் துளிகளின் மாலைகள் அணிந்தவருடையது

பொறிக்கப்பட்ட எழுத்தை விட கல்லே உன்னதமானது
சாமான்யர் வாழ்க்கை நிலையில் நாம் உணரும் சத்தியமிது

இன்றைய புராணங்கள் தேவலோகச் சிதிலங்கள்
கவிதைகள் நட்சத்திர வீதியின் நசுங்கிய பக்கங்கள்

ஒவ்வொரு சகாப்தமும் ஒரு தத்துவத்தைக் கிளப்பும்
பூமி மீது தேய்த்து பூஜை செய்யச்சொல்லும்!
மலை மீதுள்ள பழைய கோட்டை
பார்த்துக்கொண்டிருக்கிறது
பார்வையற்ற விழிகளுடன் புது மனிதன் நடவடிக்கை
உல்லாச வேட்டையில் சூட்சமம் புலப்படாது
கண்ணீர்த் துளிகளின் சத்ய தரிசனம்

தோட்டம் தோட்டமாய் பறந்துதிரியும் பட்டாம்பூச்சி
ஒவ்வொரு பூவையும் வெளிக்காட்டும் தான் ஒரு
டார்ச்லைட்டாகி
பூவின் ஆயுள் குறைவு; ஒரு நாளின் ஆயுளே நீண்டது
யாரால் சொல்ல முடியும் எது யாருடைய துரதிர்ஷ்டமென
அங்கே பார்... மேகங்களிடை உருவாக்கிய சின்னஞ்சிறு
பள்ளத்தில்
நட்சத்திரம் நிர்வாணமாய் குளிக்கிறது

வசந்தகாலம் ஒரு பயங்கர பூதம்
மிருகத்தனமான கோரிக்கைகளை
மனிதனுள் உசுப்பி யெழுப்புகிறது
வாழ்க்கை மீதான மோகத்தால்
ஒரு அருவியைப் போல் கோஷமிடுகிறது
அது பரிமளக் குடிகாரன்-
அந்த வனாந்திரம்
சித்திரையின் முதல் மென்மணத்தில்
போதை யேறி பைத்திய மாகிவிட்டது

தோட்டத்தில் பறக்கும் வானவில்
அதோ அந்த பட்டாம்பூச்சி

தன் ஒளிமிகு தோற்றத்தினால்
ஒவ்வொரு பூவையும் வெளிக்காட்டுகிறது!

இந்தக் காற்று மலைகளில் பிறந்ததா இல்லை
சமுத்திரத்திலா?
என் இதயத்தைக் காயப்படுத்துகிறது அது
பள்ளத்தாக்குகள் பெருங்குரலெடுத்து அழவைப்பதும்
இந்த வசந்தம்தான்!

என்னால் காண முடிகிறது
உன் விழித்துறைமுகத்தில்
படகுகளைப் போல் மிதந்து போகின்றன
கனவுகள்...

# விளைநிலத்தில் புழுக்கள்

**நாகேஸ்வரம் சங்கரம்**

பருத்திமொட்டுகள் வெடிப்பு காணும் பருவமிது
பருத்திப் பூக்கள் வெடித்து உதிர்கிற காலமிது
இரவெல்லாம் இமைமூடா விண்மீன்கள்
பொழுது புலர்ந்ததும்
பருத்திநில மெத்தைமீது சாய்கின்றன!

நட்சத்திரமெனச் சுடர்விடும் ஒவ்வொரு மொட்டும்
வான வயற்காட்டில்
நிலாச்சிரிப்பு சிந்திக்கொண்டிருக்கும்
எனக்கு மட்டும்
நீலவான நிலத்தில் கண்விழித்த சுடர்களுக்கும்
மண்மடியில் மலர்கின்ற பருத்திமொட்டுகளுக்கும்
வித்தியாசமே தெரிவதில்லை!

பூமி ஆகாய மத்தியில்
என்றென்றும் ஒளிரும் வடிவங்களிவை
சரி... சற்றுநேரம்
விண்சுடர்களை மறப்போமா...
பருத்திநிலங்களின் ஃப்ளாஷ்பேக் கதைகளையும்
விட்டு வைப்போம்.

இப்போதைக்கு
உயிர் ஊசலாடும் நிலையிலுள்ள
பருத்திமொட்டுக்களுக்காகத்தான்

இந்தசபை
வாழ்வுமொத்தம் தாரைவார்த்த பருத்திநிலப்பரப்பில்
விஷம் கக்கும் பருத்திப்புழுக்களின் தாக்குதல்
நிற்பதாய்த் தெரியவில்லை

பருத்தி மொட்டே? பருத்திமொட்டே!!
இமை திறக்க வேண்டிய பருவத்திலேயே
மூடவேண்டி வந்ததே!
சரேலெனக்கொட்டும் பருத்திப்புழு
துளிக்கண்ணீரேனும் சிந்தியதா?
தயை வரட்டும் தயை வரட்டும்
பருத்திமொட்டுக்கள்மேல் கருணையுண்டாகட்டும்!

கறுத்த பருத்திவிதைகள் வெண்மைப்
பால்பொங்குகளாகும்போது
பஞ்சபூதங்களுடன் இணைந்து வளர்ந்த விவசாயிகூட
ஒரு பருத்திமொட்டுதான் என நம்பவேண்டும்..
நம்பவேண்டும்!

அனுதினம் நம் அங்கங்கள் மூடும் இப்பருத்தித்துணிகள்
எந்த பருத்திமொட்டுக்குள் ஒளிந்திருந்ததோ?
கவனிக்கவேண்டும்... கவனிக்கவேண்டும்!

பால்மடிகளைப் பிதுக்குவதுபோல்
இப்பருத்தி நூல்களையும்
எத்தனை முறை பிதுக்குகிறோமோ
கண்டுபிடிக்க வேண்டும்!

நாட்டின் ஒவ்வொரு ஊரும்
ஓர் பருத்திநிலம்தான்
ஒவ்வொரு குடிசையும் ஓர் பருத்திமொட்டுதான்
மொத்தமாய் எரிந்துபோகிற மெழுகுவர்த்தி நூல்கூட
இப்பருத்திமொட்டுடையதுதான்!

ஆனால் ஆளும் அரசியலே பருத்திப் புழுவாகிவிட்டதே!
தயை வரட்டும்... தயைவரட்டும்
பருத்தி வாழ்க்கைமீது கருணை பிறக்கட்டும்..

பருத்திமொட்டே பருத்திமொட்டே
எங்கள் கவிஞர்களின் கச்சாப்பொருள் நீதான்
அஸ்திவார அடுக்கும் நீதான்
எம் காவிய ஊசியின் நூலும் நீதான்
எம் கட்டில்களின் துப்பட்டிகளும்
மௌனமாய்க் கசங்கும் தலையணைகளும்
அறுந்த செருப்புகளை
மடியிலிறுத்திக்கொண்ட நூலும்...
இப்படி அத்தனையும் இப்பருத்தி மொட்டுகளின்
தேகாத்மாக்கள் தாமே!

கறுத்த நில மடிப்புகளிடை மாயமான பருத்தி விதையே
எம் வாழ்க்கைப் படலத்தின் ஒரு பாகமாய் வாழ்கிறாயா?

பருத்திமொட்டே பருத்திமொட்டே
முடிவற்ற உன் துயரகீத ஒலிப் பேழைகேட்டு
உன்னை இம்சிக்கும் பருத்திப்புழுக்களின்
மரணகாவியம் எழுதி
உனக்கு சமர்ப்பணம் செய்வேன்!

ஒவ்வொரு கணமும் எங்கள் வாழ்க்கை நிலத்தில் பூக்கும்
நிலாத்துண்டு நீ
மண்ணின் கருவறையில் தோய்ந்த
எண்ணெய் வத்தி நீ
ஆதியந்தமற்ற எங்கள் தேசவிளக்கில் ஒளிரும்
அருணதாரை நீ...!

# நான்கு பேர் சந்தித்தபோது...

பாபினேனி சிவசங்கர்

தூரத்திலிருந்து சினேக விழிகளுடன் புன்னகையுடன்
ஆரோக்கியமாக நீங்கள் நடந்து வருகிறீர்கள்
நம் கரங்கள் மிருதுவாய் அழுத்தமாய் குலுக்கிக் கொள்கின்றன.
அனைவரும் டீ பாய் சுற்றியோ பாய் மீதோ
புல்வெளியிலோ... ஓய்வாக அமர்கிறோம்
எங்கள் பாப்பா ஓடிவந்து உங்கள் மடியில் சாய்கிறது
மாலைப் பொழுது தென்றலாய் வீசிக்கொண்டிருக்கிறது
கூடுகள் பறவைகளை அழைத்துக் கொண்டிருக்கின்றன.

நம்மில் ஒருவர் ராத்திரி பார்த்த சினிமா குறித்தோ
பெய்வது போல் பாவனை காட்டிய மழை குறித்தோ
பேச்செடுப்பார்
அதற்குள் இன்னொருவர் பாதி படித்த 'லிட்டில் ப்ரின்ஸ்'
குறித்து சந்தேகம் எழுப்புவார்.

நுனி தெரியாத முடிச்சுகளாகின்றன சர்ச்சைகள்
வீட்டிலிருந்து தேனீர் வருகிறது
டீ புகைகளிடை நண்பனின் குரல் விகசித்து
கவிதையொன்று மழைக் கால்வாயாய் நழுவுகிறது
நமக்குள் உயிரலைகள் பொங்கியெழும் பளபளக்கும்
விழிகளால் பாப்பா நம்மை மாறி மாறி
பார்த்துக்கொண்டிருக்கும்.

பிறகு
மனிதர்களின் பணத்தாகமோ ஜாதி மதப் பற்றுகளோ
அன்றைய நாட்டு நடப்புகளோ விவாதத்திற்கு வரும்
வார்த்தைகள் பரஸ்பரம் மூக்கால் உரசிக்கொள்ளும்
விவாதித்து விவாதித்து வாழ்வின் சாரத்தை
வீரியப்படுத்திக் கொள்கிறோம்!

பேச்சு திசை திரும்பி இம்முறை பியானோ படிகள் வழியே
பிதோவன் ஐந்தாம் சிம்பொனிக்குள்
ஒரு பரவசத்துடன் பயணிக்கிறோம்
இதயங்கள் பறவைகளாய்
உலகெங்கும் திரிந்து வரும்
சாயங்காலம் அடர்த்தியான இருளாகிறது
நமக்குள் கண்ணுக்குத் தெரியாத தீபங்கள் ஒளிர்கின்றன!

நால்வரும் சந்திக்கும் போது
நாம் மற்றொருவருள்ளும்
மற்றொருவர் நமக்குள்ளும்
பிரவாகிப்பது
எவ்வளவு நன்றாக இருக்கிறது!

# சமையலறை

**விமலா**

எவ்வளவு அற்புதமானது சமையலறை
பல்சுவைகள் நறுமணங்கள் வீசிக்கொண்டு
திறந்துவைத்த தின்பண்டக் கடை போல்
ஆ... நாவில் நீரூறச் செய்கிறது...
தாளிப்பு வாசனைகளுடன்
பூசையறை ஊதுவத்தி பரிமளங்களுடன்
எங்கள் சமையலறை எப்போதும் சுவாசித்தபடி....

முற்றத்தில் மோர் கடைகிற ஓசையில்
சாப்பாட்டுப் பாத்திரங்கள் துலக்குகிற சத்தத்தில்
அதிகாலையிலேயே எங்கள் சமையலறை
விழித்துக்கொள்ளும்.
மெழுகி கோலம் போட்ட அடுப்பு
எரிவதற்குத் தயாராக இருக்கும்
அஞ்சறைப் பெட்டியிலிருக்கும் சில்லறைக் காசு
ஒளித்து வைத்துத் தின்ற இனிப்புப்பண்டங்கள்
பருப்பு, வெல்லம் வைத்து பொய்ச் சமையலும்
பரிமாறுதலுமாய்
அம்மா அப்பா விளையாட்டு
இச் சமையலறை ஒரு விடாத மோகமாய்
என் பால்யத்தைக் கவ்வி விட்டது
எனக்கு எங்கள் சமையலறை ஒரு அற்புதமான
மாயா பஜாராய்த் தெரிந்தது

இப்போது சமையலறை விளையாட்டு மைதானம் அல்ல
இங்கேதான் என்னை மெருகேற்றும் முயற்சி துவங்கியது
சமையலறைத் தனத்தை இங்குதான் கற்பித்தார்கள் எனக்கு
எங்கள் அம்மா, பாட்டி
வீட்டின் மற்ற பெண்கள் அனைவரும் இங்குதான்
'ஸ்த்ரீ'கள் ஆனார்களாம்
பாத்திரங்கள், டப்பாக்கள், பைகளுடன்
விதவிதமான சடலங்கள் நிறைந்த மயானம் போல்
எங்கள் சமையலறை.

பச்சை விறகின் புகை மேகங்களிடை
எங்கள் சமையலறை சிக்கிக்கொண்டு...
பயமாய், திகிலாய், மௌனமாய், நிராசையாய்
என் அம்மா ஒரு சவமாய் மிதந்துகொண்டு
இருப்பாள் இங்கே
உண்மையில் எங்கள் அம்மாவே ஓர்
நடக்கும் சமையலறைதான்
அழுது அழுது அவள் விழிகள்
குழி விழுந்துவிட்டன
துலக்கித் துலக்கி அவள் கரங்கள் தேய்ந்து போயின!

எங்கள் அம்மாவுக்குக் கைகள் இல்லை -
அவளைப் பார்த்தால் -
ஒரு கரண்டி போல், தோசைக்கல் போல்
எங்கள் சமையலறையை அலங்கரிக்கும்
சாமான்களைப் போல் இருக்கும்
ஒவ்வொரு சமயம் அவள் எரிகிற
அடுப்புப் போன்றும் தெரிவாள்
அப்போது கூண்டிலடைக்கப்பட்ட புலி போல் அவள்
சமையலறையில் சஞ்சலத்துடன் நடந்தபடி...
செய்வதறியாது திடீரென
பாத்திரங்களை எடுத்து வீசுவாள்

எவ்வளவு சுலபமோ - கரண்டி திருப்பினால் போதும்
சமையல் ரெடி என்பார்கள் எல்லோரும்!
சாப்பிடத் தவிர இப்பக்கம் வர மாட்டார்கள் எவரும் -
இந்த சமையலறைச் சாம்ராஜ்யத்திற்கு
எங்கள் அம்மாவே மகாராணி

ஆனால் பாருங்கள்.. சமையலறைப் பாத்திரங்கள்
அத்தனை மீதும்
எங்கள் அப்பா பெயரே!
அதிர்ஷ்டவசமாய் எனக்கொரு
நல்ல சமையலறை வாய்த்தது
என்றார்கள் எல்லோரும் -
காஸ், க்ரைண்டர், ஸிங்க், டைல்ஸ்...
அம்மாவைப் போல் வடைகள், அதிரசங்கள் அல்லாமல்
இப்போது கேக்கும், ஃபுட்டிங்கும் செய்கிறேன்
இப்போதும் பாத்திரங்களில் பெயர்கள் மட்டும்
என் கணவருடையதுதான்

குக்கர் விசிலுடன், க்ரைண்டர் ஓசையுடன்
என் சமையலறை விழித்தெழும்
நான் ஓர் அலங்கரிக்கப்பட்ட சமையலறைபோல்
சாவி கொடுத்த பொம்மை போல் இங்கு
திரிந்துகொண்டிருக்கிறேன்.

என் சமையலறை ஓர் தொழிற்சாலை
பல வித சத்தங்களுடன்
இந்த சமையலறை
ஒரு கசாப்புக் கடை.
கழுவியதையே கழுவி,
ஆண்டுக் கணக்காய் சமைத்துச் சமைத்து -
பரிமாறிக்கொண்டும், எச்சில் எடுத்துக்கொண்டும்...
கடைசியில் என் கனவுகளிலும் சமையலறையே -

கலையுணர்வு நிரம்பிய சமையலறையின் கனவுகள்.
மல்லிகைப் பூக்களிலும் தாளிப்பு வாசனைகளே!

இந்த சமையலறை எரிந்து சாம்பலாகட்டும்
எவ்வளவு குரூரமானது இந்த சமையலறை!
நம் உதிரத்தை உறிஞ்சி
நம் ஆசைகளையும், கனவுகளையும் களவாடி
கொஞ்சம் கொஞ்சமாய் வாழ்வு முழுவதையும்
பிய்த்துத் தின்கிற
ராட்சஸக் கழுகு இந்த சமையலறை!

சமையலறைக் கலாசாரம், சமையலறைப் பேச்சுகள் என
சமையற்காரிகளான நாம்...
நாம் என்னவானாலும் நம் இறுதிக் கடமை
'கரண்டி திருப்புவது' என்பதான இந்த சமையலறைகளை
துவம்சம் செய்வோம் வாருங்கள்!

இனி பாத்திரங்கள் மீது எவருடைய பெயரும் வேண்டாம்
வெவ்வேறு பெயர்களில் உள்ள அடுப்புகளை
அடிமட்டத்திலிருந்து தோண்டியெடுப்போம் வாருங்கள்
மீண்டும் நம் குழந்தைகள்
இத் தனிமையான சமையலறைக்குள்
அடிவைக்கப் போகிறார்கள்
நம் குழந்தைகளுக்காக
தனிமை நிறைந்த சமையலறைகளைத்
தகர்த்தெறிவோம் வாருங்கள்!

# ஈரப்பாட்டு

ஆசாராஜு

மழை பெய்வது
ஓர் உற்சாகத் திருவிழா
மழைத்துளி விழுந்த
புல் மேல் நடப்பதும்
வானவில் துணுக்குகள் மீது பாதங்கள் வைப்பதும்
ஒரு பெரிய பண்டிகை!

மல்லிகைப் புதர் மழைத் துளிகளை
தன் மொட்டுகள் என நினைத்து
பொறுக்கிக் கொள்கிறது
மனதில் ஒரு மூலையில்
வானத்து நடுவே கட்டிய ஊஞ்சல்
மழையை ஆட்டியவாறு
ஊஞ்சலாடுகின்ற இளமைக்காலக் காதலி
வான் முகட்டை தன் கால் நக வண்ணத்தால் தொட்டு
பின்னால் உள்ள ஆகாய எல்லையைத்
தன் கூந்தலால் வருடி
தரையில் நழுவும் சேலைத் தலைப்பினால்
வீணை மீட்டுகிறது!

மல்லிகைப் புதரையும்
மனதில் நிறைந்த காதலியையும்
கண் கொட்டாது பார்க்கிற மழை -

மழையில் நனைந்த மயில் என் இதயம் மீது
தோகை விரித்தாடுகிறது!

தெரு முனைவரை
அசோக மரங்களின் குறும்பு விளையாட்டு
இந்த மழை
எந்த வாத்தியங்களுமின்றி
கோரஸாய் லதா மங்கேஷ்கராய் பாடுகிறது
பரவசத்தால்
கடலலைகள் மீது விரல்களாடும்
ஜாகீர் ஹுஸேன் தபலா வாத்தியம்

வானவில் அருவிகளுடன் உரையாடும்
லட்சக் கணக்கான ரவிசங்கர்களின்
சிதார் தந்திகள்மீது பறக்கும்
பறவைக் கூட்டத்தின்
மோகன ராக மாயாஜாலம்!

மழை என்பது
பாலைவனம் நெடுக ஈரப்பாடல்.
ஒரு கத்தியும், சில தேன் துளிகளையும்
குடித்துப் பாடுகிற
ஒரு 'ரேஷ்மா' நாட்டுப்பாடல்!
பாறாங்கற்களும் மயக்கத்தால் தவிக்கும்
'இலா அருணி'ன் வசீகர ஷாம்பெயின் புன்சிரிப்பு!

உருது கவிதைகளுக்கு
கொஞ்சம் கண்ணீர்
கொஞ்சம் சிரிப்பு
ஒரு துளி ரத்தம்
பத்து துளிகள் மது
ஒரு பாதி முத்தம்

பறவையின் சிறு கறை
ஆழமான இனிய காயம்
புல்லாங்குழல் நாதம்
அனைத்தும் இணைந்த ஷெனாய்க்கு
அமிர்தம் பொழியும் நௌஷாத் இசை!

மொகல் - ஏ - ஆஜத்தில்
கன்னத்திலும் முதுகிலும் ஒட்டிக்கொண்ட
பூக்களை மறந்து
இதழ்கள் மீது ஈரமாய் பெய்த
ராகமய ராத்திரியை மறந்து
கூந்தலில் சிக்கிக்கொண்ட நிலாக்குஞ்சங்களை மறந்து
நேச விழாவாக,
சமுத்திர 'சாரங்கி' நிசப்த எதிரொலியாய்
சலீம் மீது வீசும் மதுபாலாவின் நயன காவியம்.

மழைக்காலம் -
குழந்தைகள் பார்வையினின்று தப்பி
காகிதக் கப்பல்கள் மீது
மண்ணை ஏமாற்றி விதைகளின்
வைர சிரிப்புகள் மீது கலகலவெனப் படர்கிறது
எவ்வளவு கருணையாக, அன்பாக
இவ்வளவு மழை பெய்கிறது...!

மழை கோட்டு போட்டுக்கொண்டு
அன்பின் நனைந்துகொண்டிருக்கும் இரு குழந்தைகள்...
அவர்கள் பின் குடை பிடித்து
அவர்கள் விளையாட்டுகளை அடிச் சுவடுகளை
அள்ளிக்கொள்ளும் அம்மா -
பிள்ளைகள் நீர்க்குமிழ்களைத் துரத்தி
ஓடிக்கொண்டிருக்கிறார்கள்
மழை என்னவோ அம்மாவைத் துரத்துகிறது!

சிரிப்பது அம்மாவா அல்லது
மழை பாடுகிறதா என்று சற்று நின்று
பின்னால் பார்க்கும் சின்னப் படகுகள்
அது ஒரு
கறுப்பு வெள்ளைப் புகைப்படம்
அவர்கள்
ஒரு நனையும் ஈரக் கவிதை!

# ஏ காற்றே! வீசாதே

பூபால்

ஏ காற்றே
வெப்பமாய் வீசாதே
கட்டுடைத்து அப்பக்கமாய்
காட்டமாய் வீசாதே
அதோ அந்நினைவுச் சின்னம்
ஓர் அமரவீரனுடையது தெரியுமா?

ஆழ்ந்த மௌனத்தில் இருள் காரிருளாக
தனக்கான வேலை இன்னும் மிச்சமிருக்கிறதென
சிரிப்பு முகம் சுருக்கிக்கொண்டு
கொலை செய்யப்பட்ட பகையுடன்
படுத்திருக்கிறான்.

எந்த மலை ஊற்றோ இந்த ஏரிச் சலசலப்பு
எந்த மலைக்குழந்தை விளையாட்டோ
இப்பாதையின் கலகலப்பு
எந்த தியாகத்தின் பயனோ பூத்த இம்முழுநிலவு
எந்த அமர அடையாளங்களோ
மினுமினுக்கும் இவ்விண்மீன்கள் என்று
இதயம் சிகப்புக்கொடியாக யாரையோ
எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறான்!

வர்க்கப்போராட்டம் திக்கெட்டும் வியாபிக்க...
தளிர் சூரியனைக் கெல்லியெறிய

எதிர்தாக்குதலெனும் துப்பாக்கிவேட்டை...
பொழுதுவிடியவிடாத பொறாமைக்காரர்களை எண்ணி
குமைந்து குமைந்து... இப்போதுதான்
கண்ணயர்ந்திருக்கிறான்
கருணைக்கண்களுடன் ஆசைதீரப்பார்த்துப்போ!

பசுமைவயல் வெளியில் படுத்திருக்கும் எங்கள் அண்ணன்
பரந்தவானத்துணையுடன் பலகாலமிருப்பான்
பச்சைப்பிள்ளைகள் உன்னை பகையாளியாய்க் கருதாமல்
பிஞ்சுத்தென்றல் உதிர்த்துப்போ... அதில்
பறக்கட்டும் எங்கள் கொடி!

# அப்பா

**காஜா**

எங்கள் இதயத்தில் உன் நினைவுகள்
இன்னும் பசுமைதான்
நீ வாங்கித்தந்த புதுச்சட்டையின் பொலிவு
இன்னும் மங்கவில்லை
கோடை இரவுகளில் நான் உன் மார்பில் சாய்ந்து
நட்சத்திரப் படிகளேறி ஆகாய அந்தப்புரத்தில்
நிலாவுடன் நடத்தியபேச்சுவார்த்தை
இன்னும் முடியவில்லை!

வேலைநிமித்தம் கண்காணா இடம் சென்று...
நள்ளிரவில் எப்போதோ வந்து என் கண்மீது வைத்த
உன் அன்பு முத்திரைகள் இன்னும் அழியவில்லை
என்னைப் பள்ளியில் சேர்த்தபோது
கலெக்டராக்க வேண்டுமென
உன் கனவு மொட்டு என்ன ஆயிற்று அப்பா...?

நேற்றுவரை எங்கள் விளையாட்டிலிருந்த
குதிரை என்ன ஆயிற்று?
எனக்கு அலீஃப் மற்றும் அ, ஆ கற்பித்த
முகம்மது சார் எந்த ஊருக்கு மாற்றலானார்?
விரல் பிடித்து நடக்கக் கற்றுத் தந்த
என் சக்கரவண்டியைத் திருடியது யார்?

அப்பா ஜான்...!
உன்னை டோலாவில் சுமந்துசென்ற அன்று
எங்கள் கண்களில் நிறைந்த நீர்
அம்மா அழுகையுடன் கலந்து
இன்றும் வடிந்துகொண்டிருக்கிறது!

உன் சாய்வு நாற்காலியின் சூன்யப்பார்வை
பூதக்கண்ணாடியில் சூர்யக்கிரகணம்போல் தகிக்கிறது!

சின்ன அக்கா கல்யாணக் களைப்பு தீருவதற்குள்
தனக்கு செயின் போடவில்லையென
பெரிய அக்கா கோபித்துக்கொண்டு சென்றுவிட்டாள்!

நீ எங்களைவிட்டுச்சென்ற நாளிலிருந்து
பச்சைக்குழந்தைகளுக்கு தாயத்துகட்டும்
சாயபு இல்லையென
நம்மூர் இளம் தாய்மார் எல்லோரும்
பிள்ளைகளுக்கு ஊசிமருந்து உபயோகிக்கின்றனர்!

அப்பா... அப்பா ஜான்!
நேற்று ரம்ஜானுக்கு பழைய பைஜாமாவுடன்
தர்க்கா சென்றால்
புதுத்துணிகள் உடுத்தியிருந்த பிள்ளைகள்
கேலிப் பார்வைகளால்
எனக்குள் எழுந்த அழுகையை உள்ளடக்கி
நம்பிக்கை இழந்த தெய்வம் முன் கும்பிட்டு
உன்னை ஒருதரம் அனுப்பிவைக்க வேண்டிக்கொண்டேன்!

அப்பா... ஒரே ஒரு தடவை வா... என்னுடன் பேசு
என்னைத் தூக்கிக் கொண்டு முத்தம் கொடு
நான் உன் ஃதோஸ்த்
இனி எப்போதும் உன் பேச்சுகாய் விடமாட்டேன்
உன் கண்ணில் விழாமல் அம்மா பின்னாலிருந்து
'என்னைப்பிடி பார்க்கலாம்' என்று சதாய்க்க மாட்டேன்!

அப்பா...! நானே உன் அப்பா என்றாயே
அதனால் நான் சொல்வதைக் கேட்க வேண்டும், என்ன?
என் பிராக்ரஸ்ரிப்போர்டில் சைன் செய்து
முதலிடம் வரவேண்டும் என்றாய்
இதோ ரிப்போர்ட் வந்திருக்கிறது
கிளாஸிலேயே என் மார்க்குகள்தான் அதிகம்
ஜல்தி வந்து 'தஸ்தகத்' பண்ணு அப்பா...

# தித்திப்பு தேகம்

**என்.ஆர். பல்லம்**

நானறியாமலே
நாற்பது வசந்தங்கள் கண்ட என் உடம்பு
சர்க்கரை தொழிற்சாலையாகிவிட்டது!

தளிரைக்கொய்து
கிளைக்கு ஒட்டவைத்தாற்போல்
கூட்டைப் பிய்த்து
கவரை அடைக்கலம் காட்டுவதுபோல்
ஆழ்மனதில் இனம் தெரியா இனிப்பு உபாதை!

குரல் தெளிவாக இருக்க என் அம்மா
வசம்புத்துண்டை கரும்புப்பாகில் தோய்த்து
புகட்டினாளோ என்னவோ?
காரியம் சாதித்துக்கொள்ள பாட்டி
ஆசை வார்த்தைகளுடன்
அச்சுவெல்லப்பலகாரங்கள் ஊட்டினாரோ?

காசி செல்லாமலே
சர்க்கரையைத்தாரை வார்த்தாகிவிட்டது
புதிதாய் வந்து சேர்ந்த உபாதை விருந்தாளியின்
கடைக்கண் பார்வையில்
அதுவரை அன்னியோன்யமாய் இருந்த ஆரோக்கிய சுந்தரி
வெட்கித் தலைகுனிந்தாள்!

துறுதுறுக்கும் கருவிழிகளில்
பயமும் சுயபச்சாதாபமும் குடிபுகுந்தன

மிட்டாய்க்கடை இனிப்புப்பண்டங்கள்
ஆசைகாட்டி அழைக்கையில்
நாடிநரம்புகள் வெடித்துச் சிதறும் பரபரப்பு!

கரும்புஇனிப்பான வாழ்வை
கசப்பு மருந்தாய் விழுங்கும் கட்டாயம்!

நாளைய வாழ்க்கைக்கு இன்றே
அபத்திர அஸ்திவாரம் அமையும் பாவனை!

அடிபட்டால் உடம்பினின்று சொட்டுவது
சர்க்கரைச் சாறெனக் கிரகித்தபின்
இன்சுலின் தேடல் மெல்ல மெல்லத் துவங்கிவிட்டது!

மணலில் புதையுண்ட பாதங்களுடன்
ஓடுவது இருக்கட்டும்...
நடப்பதே சிரமமாகும் வெளிப்படை உண்மை
முகத்திலறைகிறது!

இளமையிலிருந்து பிரவாகித்த நடைநதி
கிலோமீட்டருக்கு இவ்வளவு காலமென
கரைந்து போய்க்கொண்டிருக்கிறது!

டயபடீஸ் பாம்பு அடித்து நினைவு தப்பும் நிலையடைந்தால்
தொண்டைக்குழியில் ஊற்றவேண்டியது
துளசிதீர்த்தம் அல்ல
பாகற்சாறு அல்லது வெந்தயமோர்!

என்னைத் தகனம் செய்யும்போது
விறகுகளால் அல்ல
கரும்புச்சக்கைகளால் எரியுங்கள்
புதைக்க வேண்டி வந்தால்
கைப்பிடி மண் அல்ல
கையளவு சர்க்கரை போடுங்கள்!

# பன்மை இதயம்

**கொண்டே பூடி நிர்மலா**

அப்படியொன்றும் அவ்வளவு திடீரென்றல்ல- ஆனாலும்
பாயின் கீழ் தண்ணீரும் பன்னிரண்டு வயதுப் பருவமும்
சொல்லாமலே வந்துவிடும்
உடம்பு உயரமாய் வளர்ந்து பளபளப்பு கூட்டி
கண்ணாடிச் சிதறலாய்
ஊடுருவுகின்ற இடத்தில்
மையம்கொண்ட அச்சமாய்
பொந்து எலிகளின் பீதியாய்
தலை குனிந்து பார்வையை வீசிய இடத்தில்
ஆச்சரியச் சின்னமாய் பிறந்து
கிளை நுனியிலுள்ள பூவின் காம்பைப் போல் நீண்ட
கழுத்திற்கு கீழ்
வாழை இலையைப் போன்ற பிளவின்
அப்புறமும் இப்புறமுமாய்
திரவமுமில்லாத திடமுமில்லாத இதயத்திற்கு
அசலான பன்மை.

இதயத்தை இப்போது உள்ளங்கையால்
பிடித்துக்கொள்ளலாம்
இரு சிறு குன்றுகளாய் வளர்ந்து...
நிலாவைக் கேள்வி கேட்கிற ஆள்காட்டி விரலுக்கிருக்கும்
மருதாணிப் பளபளப்பாய்
பேசாத மல்லிகை மொட்டுகள்

நடக்கும்போது மென்மையாய் அசைந்து
குளியலில் குளித்து
உறக்கத்தில் உறங்கி
விழிப்பில் விரக்தியைத் தோய்த்து
எப்பேர்ப்பட்ட விழிகளுக்கும் தலையணைகளாகும்!

ஆசாபாசமற்ற முனிவர்களைப் போல்...
மோகத்தில் நனைந்து
தாபத்தால் நடுங்கி
கும்பிடும் கரங்களை ஒன்று சேரவிடாமல்
கண்கட்டு வித்தை போல்
கரைந்த சிலைகளாய்
உறைந்த அலைகளாய்
தங்களுக்குத் தாங்களே வசப்படாது
இரு அற்புதமான உலகங்களாகின்றன!

விழைவற்ற கணத்தில்
நினைப்பளவிலேயே முகம் சுளித்து
யுத்த கைதிகளாய் பிடிபட்டாற்போல் தப்பியோடி
தற்கொலை செய்துகொண்டாற் போல் தோற்றமளிக்கும்
தாய்மைக்காக
தலைகீழாய் தவம் செய்தபோது
தாய்மைக் கர்வத்தால் கனமேறி
பூ மாலைகளின் அலங்காரமாய்
கொஞ்சம் தலை சாய்ந்து
காதல் என்றால் கறுப்பா... சிவப்பா என்று
புதிர்க் கேள்விகள் கேட்கும்
நடு வயதிலும் கோடையிலும்
பேதமை நிழலாய் ஊர்கின்ற போது...

'உனக்கு ஒன்றும் புரியாது வாய்மூடு...' என்கிற
பெரியவர்கள் அதட்டலுக்கு மிரண்டு...

பயப்பட்டாற் போல் காட்டிக்கொள்ளாமல்
ஏதோ சொல்லி வாதம் செய்தபடி
சேலைத்தலைப்பால் மூக்குக் கண்ணாடி துடைத்த வேகத்தில்
எதற்கு வருத்தம், என்ன இந்த பாவனை என்று..
சொல்ல முடியாமல்
'பேட்ச் ஒர்க்கா'ய் வலம் வந்து
'எக்ஸ்க்ரேஷியா'க்களாய் சேர்த்துக்கொண்ட
பட்டுப்புடவைகள், சந்திரஹார நகைகளின் எண்ணிக்கை
விலக்கிப் பார்த்தால்
ஜாக்கெட் பொருந்தும் கச்சிதமாய்!

அடர்ந்த ஒரு இருள் கோடுபோல்
முதுகு சுற்றிவந்து இதயத்தின் மீது
அடிவைக்கும் போது
பிடிபட்டுவிட்ட திகிலாய் இற்றுப்போய்
அறுபது வயதில்
காலத்தின் பிடியில் சிக்கி
நோய்களுக்குச் சிக்கி
கசப்பேறிய உண்மைகளிடை சிக்கி
இதே இதயத்தை தோள் பையாய்
குடலை உருவி மாலை போட்டுக்கொண்டாற் போல்
மெல்லிய நரம்புகள் நீண்டு தெரியும்!

சிருங்கார வெள்ளத்திற்கு அணையிட்டு
சஞ்சலம் தொலைத்த தன்மைகளுக்கு
தாம்பூலம் தருவதுபோல்
விரித்த வெற்றிலைகளில் பாக்கு வைத்த பாவனையில்
சொல்ல வியலா வேதனையாய்...
கருணையாய்... பொறுமையாய்...

# இதயகாண்டபம்

## ஜ்வாலாமுகி

ஆவேசங்களை அர்த்தப்படுத்திய வெள்ளக்கோவில்
ஆலோசனைகளைச் சாரமுள்ளதாய்ச் செய்த ஜீவநதி
கனவுகளை தர்மமயமாக்கிய சாக்ய முனி
ஜீவ ஊற்றைப்பெருக்கும் இதயம் பாசகங்கோத்ரி!

ஊடுருவிய கால்ஷியத்தால் ஜீவனகங்கையின் ஆக்ரோஷம்
இதயத்தில் கூடாரமிட்ட அடையாளம் தெரியா ஒற்றன்
இதயத்தின் விசுவாச சேவகனாய் 'கொலஸ்ட்ரால்'
இதயக்குரலின் இசையை நெறிக்கும் கோடை வேளை!

சோர்வுபடர்ந்த இதயகாண்டபத்தின் சோகயோகம்
அந்நியமாகிவிட்ட உயிரணுக்களின் பரிதவிப்பு
உண்மை உறைந்து மூச்சுத்திணறும் பரிதாபம்
பேச்சுவார்த்தை நடக்காமலே தன்னம்பிக்கை வீழ்ச்சி....

வாழ்க்கை சபிக்கப்பட்டதாகக்கூடாது
வாழ்க்கை வரப்பிரசாதமாகவும் இருக்காது
துரத்தும் துயரங்களுடன் வாழ்க்கைப் போர்
தோல்விகளின் புரட்சியாகும் பெருமூச்சுத்தொனி!

ஏழை எளிய கிராமவாசிகளின் அபயக்கர பாதுகாப்பு
எழுத்தறிவான காவல்ரட்சை
ஆழ்நித்திரையத் தட்டியெழுப்பும் லௌகீகப்புரட்சி
போராடும் இதயத்துள் கோஷமிடும் மனிதாபிமானப்
பேருயிர்!

அன்பு, ஆதரவு ஆட்படுத்திக்கொண்டு
ஆளுமை வென்று காட்டும்
பயம், குழப்பம் எனும் கத்தி வீச்சினின்று தப்பிவரும் பட்சி
கிழக்கு வாசலில் கீதமிசைத்தபடி
சாசுவதஜ்வாலையாய் பிரகாசிக்கும்
ஆசைப் பாலம் வழியே நம்பிக்கைக்கொடி
லட்சியத்தை அடைந்து விடும்!

# வார்த்தைகள்

**வரவரராவ்**

மனப் புதைகளில் பொதிந்த வார்த்தைகளைத்
தட்டியெழுப்பி நடத்திப் பார்க்கவேண்டும்
சூம்பிய கால்களை நிற்க வைத்து
இறக்கைகள் ஆகாயத்தில்
பறக்கச் செய்து பார்க்கவேண்டும்
வறண்டுபோன செவிகளுக்கு யாருடையதோ அல்ல
என் வார்த்தைகளும்
பஞ்சத்திற்குப் பின் வரும் மழைத்துளிகள் போல்
புதிதாகவே இருக்கும்!

மறந்து போன மழைக்காலத்தை ஆகாயம்
மறுபடியும் வாசித்தால் எவ்வளவு நன்றாக இருக்குமோ
எனக்கு அப்படிப்பட்ட வார்த்தைப் பிரபஞ்சத்தில்
மண்ணில் முளை விட ஆசை...

எனக்கு மறுபடியும் வார்த்தைகள் கற்றுக்கொள்ள ஆசை
பள்ளியிலும் கூட்டத்திலும்
பிள்ளைகளிடமிருந்து பெரியவர்களிடமிருந்து
வரவாற்றின் ஒவ்வொரு வரியினின்றும்
வார்த்தைகளைப் பொறுக்கிக் கொள்ள ஆசை
வார்த்தையே இல்லையெனில் இத்தனை காலம்
மனதில் படர்ந்த இந்த மௌனம் எப்படி வெடிக்கும்

வார்த்தையே இல்லையெனில் இவ்வளவு நாட்கள்
கண்களில் ஒளித்து வைத்த
இக் காட்சி எப்படி ஒளிரும்?

நம்மவர்களுடன் பேசியும் கேட்டும்
மறுபடியும் நான் பேசக் கற்றுக்கொள்ள வேண்டும்
வார்த்தை மீது நின்று வார்த்தைக்குக் கட்டுப்பட வேண்டும்
சொல் இழந்தால் மனிதனுக்கு இனி என்ன மிச்சம்?

வார்த்தைகள் கரைபட முடியாது
காலத்தின் உலைச் சுவாலைகளில்
சம்மட்டி அடியிலிருத்தி
இதோ, சரியான நேரம்...
வார்த்தைகளைச் செப்பனிட்டுக்கொள்கிறேன்!

# (கேபிள்) நட்சத்திர ஆளுமை

வஜ்ஜல சிவகுமார்

கண்கள் ஒப்படைக்கும் வரைதான்..
ஒப்படைத்த பிறகு பார்வைகள் உன்னுடன்
தொடர்புகள் அறுத்துக்கொள்ளும்
நீ ஒரு வளர்ப்பு நாயாய்
உமிழ் நீர் ஒழுக படுத்துக் கிடப்பாய்!

மூளை எங்கேயோ உதிர்ந்து போய்
தலை மட்டும் உடல் மீது
கொஞ்சிக்கொண்டு மடியில் இழுத்துப்போட்டு
எபிஸோட்கள்
விழிக்கோலங்கள் மீது பாதம் பதிக்கும்!

உண்மையான காட்சிகளை
சரசரவென மிதித்துக்கொண்டு
குளம்புகள் 'ரெடினா' மீது
சாணம் ஒட்டிக்கொண்ட முத்திரைகளாகும்!

பார்க்கத் தொடங்கும் வரைதான்...
அப்புறம் உண்மை கசந்துவிடும்
ஒய்யாரவளைவுகள் போட்டிபோட்டு
மோகங்களை சமைத்துப் பரிமாறும்!

உன்மத்த பருவப் பிரபஞ்சத்தில் உத்தியோகம் பார்த்து
நாளெல்லாம் வலியூட்டும் நட்சத்திரங்கள்

அங்கே காயமடைந்த உடலாய் சோர்ந்து போவாய்
இனி குணமடையும் வாய்ப்பே இல்லை
அது ஒரு பயங்கரமான வலை
உன்னையும் என்னையும் நிர்மூலம் செய்வதற்கென்றே
விரிக்கப்பட்ட வலை
வண்ண ஜாலங்களால் பார்வையைக் கவ்விய கனவு
கேள்வியெழுப்பாமல் எதிர்ப்பு காட்டாமல்
கண்களுக்கு 'ஸ்டெராயிட்' ஏற்றுவது
நட்சத்திரங்களைத் தலைமீதேற்றி
இறக்கைகளை ஆளுமைக்குள் வைப்பது
சதியின் ஒரு பங்குதான்!

நரம்புகளுக்கு நாகரிகம் கற்பித்து
ஜன்னியேற்படுத்துவதும்
சதியின் பாகம்தான்!
நம் விழிக்கோலங்களால் ஹாங்காங்கில்
பிங்பாங்க் ஆடுவதும்
சதியின் பாகம்தான்!

இனி நீ ஓர் அடிமை
உன் ஒவ்வொரு அசைவும் அடிமை
நாளைய பந்தய பிரபஞ்சத்திற்கு
உன் பார்வையை விதை!

இனி நம் அனைவருடைய கண்களிலும்
நட்சத்திர ஆளுமைதான்!

# கற்பனையினின்று கற்பனைக்குள்

கே. சிவாரெட்டி

கற்பனையினின்று கற்பனைக்குள் ஊஞ்சல்
காற்றினின்று காற்றுக்குள் ஊஞ்சல்
அத்திசைக்கோடியினின்று இத்திசை இறுதிவரை ஊஞ்சல்
மல்லாந்து விழுந்த அரை வட்டம் போல்
இப்பக்கத்தினின்று அப்பக்கத்திற்கு ஊடுருவும்போது
சரேலென நீளப்பின்னலொன்று
பூமியைத் தொட்டுக்கொண்டு கடக்கிறது!

பாவாடைக் கொசுவங்கள் தரையை முத்தமிட்டபடி
செல்கின்றன
எங்கோ பூமிக்கருவறையில் சமுத்திர இதயத்தில்
ஒரு நடுக்கம் பரவுகிறது!

உலகெல்லாம் ஊஞ்சலாடுகிறது
கலகலவெனப்பொங்கும் சிரிப்பினின்று கண்ணீர்த்துளிகள்
விசித்திரம்! நெடிய விருட்சங்களின் வேர்கள்
வலுவாய் பூமிக்குள்..
ஊஞ்சல்வேர்கள் மரக்கிளையை இறுகச்சுற்றியபடி
புதுப்பாவாடை ட்ரங்குபெட்டி வாசனைகளுடன்
நகைப்பேழையில் தங்கநகைகளின் மங்கிய வண்ணத்துடன்
அப்போதுதான் அணிந்த தாவணிப்பாம்பு

சர்ரென் று நழுவ
என்னசெய்வதென்றறியாத கலவரப்பார்வைகள்
கருணைகசியும் எழில் சூழல்கள்
எங்கு நோக்கினும் பூக்கள் பூக்கள்
பூக்கள் திருநாளின் ஞாபக எதிரொலி!

அங்கு ஊஞ்சலில் ஆகாயத்தில் மிதந்தபடி
எங்கள் அக்காவும் என் சின்னக்காதலியும்...
என் விழிகள் ஊஞ்சலுடன் அப்படியும் இப்படியுமாய்
இப்படியும் அப்படியுமாய் ஆடி ஆடி அசைந்து அசைந்து
தள்ளாடிக்கொண்டிருக்கின்றன!

பார்வையில்படும் ஜீவனமைதானமெங்கும்
தராசுத்தட்டுகளாய் ஏறி இறங்குகின்றன
ஊஞ்சல் கம்பத்தில் கட்டிய கயிற்றைப் பிடித்து
முறைப்பையன் எவனோ ஆட்டிக்கொண்டிருக்கிறான்
ஒருவேளை... ஊஞ்சலுடன் இப்போதும் ஆடிக்
கொண்டிருப்பானோ?
அவ்வப்போது உள்ளங்கைகளைப் பார்த்தபடி
மகிழ்ச்சியுடன் மலர்ச்சியுடன்
முறுவலித்துக்கொண்டிருப்பான்
'திக்பாலகர்கள்' இறங்கிவந்து சுற்றிலும் நின்றிருப்பார்கள்
மேலிருக்கும் தேவதைகளெல்லாம்
அசட்டு முகங்களுடன் வாயில் விரல் வைத்தபடி
பார்த்துக்கொண்டிருப்பார்கள்
'என்ன அழகு... என்ன அழகு
எவ்வளவு ஆனந்தம்... எவ்வளவு ஆனந்தம்' என!

இன்றைக்கும் கற்பனை ஊஞ்சலேறி
ஆடிக்கொண்டிருக்கிறேன்

இவ்வூரினின்று அவ்வூருக்கு
அந்த ஏரியினின்று இந்த ஏரிக்கு
இக்காட்டினின்று அக்காட்டிற்கு
அக்கிராமத்தினின்று இக்கிராமத்திற்கு
இப்போதும் இதயத்தில் ஊஞ்சல் அசைந்தபடி...

ஐம்பது வயதாகியும்
சின்னப் பையனாக்கி ஆட்டிக்கொண்டே இருக்கிறது!

இருக்கிறவரை ஆடிக்கொண்டே இருப்பேன்
என்காலம் முடிந்தபின்
என் பாட்டு வேர்களின் நுனிகளைப் பிடித்துக்கொண்டு
நிரந்தரமாய் ஆடிக்கொண்டிருப்பீர்கள் உல்லாசமாக
நீங்கள் கீழிருந்து மேலே மேலிருந்து கீழே
ஷேக்ஸ்பியர் சொன்னதுபோல்
பூமி ஆகாயத்திடையுள்ள அத்தனையும் பார்த்தபடி
ஆராய்ந்தபடி அங்கீகரித்தபடி அனுபவித்தபடி...

சுவாசம் நின்றுபோனாலும் ஊஞ்சல் நிற்கக்கூடாது
இதயத்துள்ளிருக்கும் ஊஞ்சல் நிற்கவே கூடாது!

## சாலை விபத்து

**இஸ்மாயில்**

ஊசிபோல் ஊடுருவிச்செல்லும்
மிதிவண்டியுடன்
மாலைநேர நெரிசலில் லேஸ்கள் பின்னி
சாலையில் கடைசியாக
உதிரப்பூவைப் படைத்துவிட்டான்
இந்தப் பையன்!

# காட்டுநிலா

சிவசங்கர்

காட்டிலுள்ள வெண்ணிலா
ஆலோசனைகளெனும் மலையுச்சியில்
நிமிர்ந்து நின்று கொண்டிருக்கிறது.

அது காட்டிலுள்ள
கிராமங்களில் ஏரிகளில் நதிகளில்
இன்று வியாபித்துக் கொண்டிருக்கிறது.

அது அடக்குமுறைக் கடும்குளிரில்
லட்சிய எஃகுக் கவசமணிந்து
ட்ரிக்கரில் விரலுடன்
இன்றைய சரித்திரத்திற்கு
இரவும்பகலும் 'ஸெண்ட்ரீ' ஆனது.

ஜன சக்திக்கு அது
கத்தி சண்டை கற்பிக்கிறது
காலத்திற்கு
'எச்சரிக்கை' அறிவிக்கிறது.

காட்டிலுள்ள வெண்ணிலா
மனதிற்கிசைந்த தண்ணிலா
தியாக யூனிஃபார்ம் அணிந்த
மேகங்களைத் தரையில் இறக்குகின்றது!

# ‘வி’ நாயக வலயம்

**நிகிலேஷ்வர்**

மதக் கலாசாரத் தலைநகரில்
கஜ முகனின் சித்திர விசித்திர அபிநயங்களில்
நிசப்தத்தைக் குழிதோண்டிப் புதைத்து
செவிப்பறைகளில் ஆக்ரோஷமாய் மோதும்
மின் கம்பிகள் ராகங்களில்
துவேஷக் கத்திகளுடன்
அதி தண்மையாய்
உதிரப் புன்முறுவலுடன்
பிறை நிலா!

பாட்டன், முப்பாட்டன், இன்னும் மற்ற
மூதாதையர் ஞாபகார்த்தம் போலும்
பசி தீர்ந்து சபலமெழுப்பும் தொந்திகளை
அத்தனையும் சுரண்டநினைக்கும் யானைத்தலைகளை
விபரீத ஆவேசங்களைத் தூண்டும் சமாதிகளை
இத்தினம் ஒவ்வோராண்டும் பூஜிக்கும்
புராதன ஆனந்தங்களில்
கிரகவெளியாத்திரைகளில் விஞ்ஞானங்களில்
புலமை பெற்ற பண்டிதன் இன்றைய மனிதன்
சமத்துவம் கரிசனம் தோழமை வேண்டும்
சகஜீவ வாழ்க்கையில் மட்டும் அரைகுறையானவன்
‘வி’ நாயக வலயத்தில்
தொலைந்துபோன நடுயுகத்தின்
சகுனி ஜீவன்!

# தலைமாட்டில் அகல் விளக்கு

அப்ஸர்

இனி என்ன இந்த உலகத்துடன் என்றபடி
இப்படியே போய்க்கொண்டிருக்கிறார்கள் அனைவரும்
விசாலமான ஆகாய நிழல் தாண்டி
அன்னையின் கருணை போல் விகசித்த பூமி மடியிலிருந்து
ஆறடி மண்ணில்
ஆறிப் போன எலும்புகள் நடுவில் முடங்கிக் கிடக்கிறார்கள்
இளமை ஞாபகங்களின் மண்ணைத் தோண்டி யெடுத்தவா று
கண்ணீர்த் துளிகளில் சுழன் று கொண்டிருக்கிறோம் நாம்!

கடைசித் துளி மீது கால் வைத்து
உயிருக்கு இறக்கை கட்டுகிறது மரணம்
எந்தக் கணக்கையும் சரி செய்யாமலே
கழுத்தைப் பிசைந்து கொண்டு
அகண்ட ஆகாயத்திற்குப் பறந்துபோகிறது
உள்ளிருக்கும் கிளி!

இங்கென்னவென்றால்
சுமையேறிய கண்ணீர் விக்கல் ஒன் றுதான் மிஞ்சியிருக்கும்
நினைத்து நினைத்து
இம் மிச்ச மீதி உயிரும் பட்டென உடைந்து போகுமோ
மனிதனை நடுச்சமுத்திரத்தில் படகு போல் விட்டுவிட்டு
வெறும் கைகளுடன் திரும்பிவர முடியாதல்லவா
உயிரடங்கிப் போன மனிதன்
வெறும் சாம்பல்துகள் தானா?

கணம் முன் வரை
நம் உடலுடன் ஒட்டிக்கொண்டிருந்த தோளையும்
இப்போதுதான்

இங்கு கேட்ட இதயத் துடிப்பையும்
ஜீவனுடன் ஒலித்த பேச்சையும்
உண்மைதான்
காலம் நிர்தாட்சண்யமாய் தட்டிச் சென்றுவிட்டால்
உள்ளே எத்தனை கலவர அலைகள்?

வேறெதுவும் மிஞ்சாது
செடியும் கொடியும் எதிர் நோக்கிக்கொண்டிருக்கும்
என் கண்ணிமைகளுக்கு என்ன ஆயிற்று என்று.

மாலை இருளில் பொதிந்த வீடு
திரும்பி வராத அடிச் சத்தத்திற்காக
செவிகள் நீட்டிக்கொண்டிருக்கும்
உள்ளங்கையைக் குடையாக வைத்து
தன்னை உற்று நோக்கும் கண்ணுக்காக
அங்குமிங்கும் ஓடும் மேகம் ஒன்று
சற்று நேரம் நின்று பார்க்கும்
கால் கழுவி பிராணதானம் செய்யும்
அக் கையைப் பார்வைகளால்
தொட்டுக் கொண்டிருக்கும் செடிகள் எல்லாம்!

அம்மா! எவரானாலும் எங்கு போவார்கள்!
இருந்தும் இல்லாதது போன்ற உலகத்தில்
சென்றும் இருப்பது போன்று இருப்பவர்களும் உண்டு
அவர்கள் மரணத்திலிருந்து சென்று
ஞாபகக் கதவு திறந்து கொண்டு வருவார்கள்
இருட்டுக்குள் புகுந்து
சட்டென ஒளியைத் துரத்திக் கொண்டு வருவார்கள்!

காலமோ மரணமோ
ஞாபகத்தைத் தகனம் செய்ய முடியாதல்லவா
மீண்டும் எழ முடியாத உறக்கத்திலிருந்து
சிரித்துக் கொண்டிருப்பார்கள்..
என்றைக்கும் அவர்கள்
நம் மன ஊஞ்லினின்று இறங்காத பச்சைக் குழந்தைகளே!

# பள்ளிக்கூடம்

## சன்னபுரெட்டி வெங்கடராமிரெட்டி

மணி முழங்கும் போதெல்லாம் பள்ளிக்கூடம்
கையில் விளக்குகளுடன்
ஓரிடத்தில் குழுமிய தாரைகளின் பகல் ஆகாயமாகிறது
மணி முழங்கும் போதெல்லாம் பள்ளிக்கூட முற்றம்
புறாக்கள் கூடிய கோயில் பிராகாரம்போல்
தோற்றமளிக்கிறது!

மரத்தடியில் நின்று பள்ளி ஜன்னலைப் பார்ப்போமா -
தரை மீது அலங்கரித்த பூமேடை ஞாபகம் வருகிறது
ஆசிரியர் குரல் ஒலிக்கும்போது பள்ளி உச்சியிலிருந்து
ஏரியின் சலசலப்பு உரசும் பள்ளத்தாக்காகிறது
கலப்படமற்ற புன்னகைகள்
பள்ளிச் சுவர்கள் வாக்கியங்களுடன்
தினந்தோறும் கைகுலுக்கும்
மரமாய், குன்றாய், வயலாய் எத்தனை
வடிவங்களெடுத்தாலும்
கறை படியாத இதயம் இப்பள்ளிக்கூடம்!

செல்வத்தின் வியாதி பீடிக்காத இதய இலைகளால்
இளம் பிஞ்சுகள் மூளைகளை ஒழுங்குபடுத்துகிறது இது
ஆசிரியர் உடலை வருடிக்கொடுக்கும்
இளம்பூக்களின் பரிமளம்
பள்ளியின் இருப்பை காற்று உள்ளத்தில் செதுக்குகிறது!

# பருவநிலைகள்

**[illegible]**

வாழ்க்கை இப்போது எப்படியிருக்கிறது?
தூண்டில் இரைப்பிரமையினின்று தப்பித்து
கண்மூடிக்கொண்டு வலைமோனையில் விழுந்து
சுவாசம் திக்குமுக்காடுவதுபோலிருக்கிறது!

மனம் எப்படியுள்ளது?
சட்டியினின்று அடுப்பில் குதித்தாற்போல்
அரைகுறை நிர்ணயங்களுடன் குழப்பங்களுடன்
எங்கும் நிலைகொள்ளாது
சூடுகண்ட பூனையாய் அல்லாடிக்கொண்டிருக்கிறது!

பிள்ளைகள் இப்போது எப்படி இருக்கிறார்கள்?
சோர்வுற்ற சாயங்காலங்களில்
வீட்டுப் பாடப் படிப்பாய் புத்தியாய்
பகவளாப்பு செய்யும் டி.வி.யாய்
புத்தக மூட்டை சுமக்கும்
ஒரு மரத்தடி பள்ளிக்கூடமாய் இருக்கிறார்கள்!

அம்மா எப்படி இருக்கிறார்கள்?
வீடிழந்து நிலமிழந்து
பெருக்கி சாணம்தெளித்து கோலமிட்டு
ஆசையாய்ப் பராமரித்த ஏக்கர் வாசலிழந்து
திகிலாய் தனியாய் வெறுமையாய்
ஏதோ பறிகொடுத்தாற்போல்

ஆறுமாதமாய் ஆஸ்பத்திரிக்கட்டிலில்
பார்வையால் துழாவும் உருவம்போல் இருக்கிறார்கள்!

இப்போது நிலைமை எப்படியுள்ளது?
ஆகாயத்தில் கழுகு சிறகடித்துத் திரியும் சத்தம்
பீதியுடன் தாய்க்கோழி இறக்கைகளிடை
தலைபுதைத்த குஞ்சுகள்போல் இருக்கிறது!

ஊர் எப்படி இருக்கிறது இப்போது?
ராத்திரி ஊர் ஜனங்கள் முன்
மகனை ஏற்றிச் சென்ற டீஸல் ஜீப்
விடிவதற்குள் அடையாளம் தெரியாத சவமானால்
வெளிப்படையாய்ப் பேசுவதற்கும்
துக்கம் தீர அழுவதற்கும் கூட
தைரியமற்ற தகப்பனைப் போலிருக்கிறது!

# வண்ணங்களும் ராகங்களும்

**பி. நரசிங்கராவ்**

ஆலோசனை அகண்டவெளியில்
பயணித்துக் கொண்டிருக்கிறேன்
பசியால் தவித்தபடி
மூவுலகும் அலைந்து கொண்டிருக்கிறேன்!

கனவுகளை மென்று
கடற்கருவறையுள் மெய்மறந்து
உறங்கிக்கொண்டிருக்கிறேன்
கண் இமைகள் மீது
வண்ண வண்ணச் சித்திரங்கள்
ராஜ்யம் நடத்துகின்றன!

இதயப் படிமத்தில்
நதிகளும் சமுத்திரங்களும்
வனங்களும் வானமும் மலைகளும்
முத்திரை பதித்துக் கொண்டிருக்கின்றன!

பகலெல்லாம் உறங்கி
இரவெல்லாம் காடுகளில் ஓடியபடி
விந்தை ஜந்துக்களுடன் குரூரமிருகங்களுடன்
சிநேகித்தபடி...
போராடியபடி...

# ஒரு காதல் கீதம்

## ஸ்ரீ தர்பசயனம் ஸ்ரீனிவாசாசார்யா

என்ன இருக் கிறது... இரு தனிமனிதர்களும்
இரண்டு ஏகாந்தப் பயணங்களுமாய்,
எவர் கரையில் அவர் நடந்தபடி
ஏதோ ஒரு மந்திரமோகன கணத்தில்
ஒருவருக்கொருவர் எதிர்பட்டு சட்டென நின்று
கசிந்து கரைந்து மிருதுவாய் நளினமாய்
ஒருவர் கண்களுள் மற்றவர் புகுந்து
ஒளிர்ந்து... பரிமளித்து
இனி இவர்கள் இருவரல்ல
ஒரே காதல்!

இப்போது தானா இவர்கள் முதன்முறையாய் சந்தித்தது?
இருக்காதோ... அந்தக்காலத்தில் எங்கோ ஓர்
புராதனக்கரையில்
ஒருவரையொருவர் ஸ்பரிசித்துக் கொண்டாற்போல்
மங்கலாய் ஞாபகம்
இத்தனை நாட்கள் இதயப்புல்வெளியில்
அசைந்தாடிய வண்ண ஊகமேதோ வடிவெடுத்து
இன்று இப்படி சந்தித்துக்கொண்டாற்போன்றா?

ஒருவரையொருவர் இப்போதுதான்
தெரிந்துகொண்டாற்போல்
இல்லை, இதற்குமுன்பே தெரிந்து கொண்டாற்போன்றும்
இல்லை, இன்னும்

தெரிந்துகொள்ள வேண்டியுள்ளது போன்றும்
தெரிந்தும் தெரியாதது மாதிரியும்...
அத்தனையும் ஒரு பிரவாகம்மாதிரி இருவரிடை...

இப்போதுதான் அறிமுகமாகி அதற்குள்ளேயே நெருக்கமாகி
இரண்டு மரங்கள் பின்னிப்பிணைந்து அழகானகாடாய்
விஸ்தரித்ததுபோல்...
பசுமையான பரிமளமும்
வெப்பமான வெளிச்சமும் இணைந்து
இருவரிடை பார்வையாய்ப் பிரவாகித்து
இரண்டு ஏகாந்தங்களை இணைத்து
ஒரு பாடலாய் வடிவமைத்து

அதுவரை அமைதியாய்க்கிடந்த சுற்றுச்சூழல்
அந்நான்கு விழிகளின் சங்கீத சன்னிதியில் ராகமயமாகி
பூவனங்கள் புறப்பட்டு வந்து சபை கூட்டுகிறது
நதிகள் ஒய்யார வளைவுகளுடன்
சலசலவென வந்து பாய்கின்றன
பறவைகள் புதுப்பாடல் கற்றுக்கொள்ளக் குழுமுகின்றன
சமுத்திரம் அலைக்கீர்த்தனைகளை ஆலாபிக்கின்றது.

காலம் அலங்கரித்துக்கொண்டு கோடைமாலையின்
குளிர்த்தென்றலாகிறது
விடியற் சூரியனும் குளுமை வெண்ணிலவும்
ஏககாலத் தீபங்களாகி
அந்நான்கு விழிகள் வெளிச்சத்துடன் போட்டியிடுகின்றன!

அவர்கள் மௌனமாய் உரையாடும்போது
வார்த்தை வெட்கப்படுகிறது
அவர்கள் சொற்களாய் விகசிக்கும் போது மௌனம்
கவனத்துடன் கேட்டுக் கொண்டிருக்கும்.

அவ்விருவரின் உரையாடலிலும் மௌனத்திலும்
சந்தனப்பூச்சு தளதளக்கிறது!

ஒருவர் சந்தோஷங்கள் மற்றொருவருள் பொங்கி
ஒருவர் சோகங்கள் மற்றொருவர் கண்ணீராகி
ஒருவர் மற்றொருவருள் உயிராய்ப் பிரதிபலித்து
ஒருவர் இருப்பு மற்றொருவருள் உயிர்த்து
ஒருவருக்கொருவராய் ஜீவசாகசங்களில்
மூழ்கி மிதக்கும்போது
அவர்கள் இருவரா? இருப்பதெல்லாம் ஒரே காதல்!

அனைவருடைய உலகத்தில் இவ்விருவர் இருந்தாலும்
இவர்கள் உலகம் வேறு - அதன் ஜனத்தொகை இருவரே
இவர்கள் உலகம் இவர்களுக்கு மட்டுமே ஆயினும் அது
ஒளிரும் வார்த்தையாய் பூப்பரிமளமாய்
அனைவருலகையும் அன்பாய் விசாரிக்கிறது!

அனைவருலகிற்கும் இவர்கள் தெரியுமென்றாலும்
இவர்களை இவர்கள் அறிந்த அளவில்
வேறெவருக்கும் தெரியாது
இவர்கள் உரையாடல் உலகமொழிக்கெட்டாமல்
ஒரு தனி மொழியாகிறது... லிபியற்ற மொழி...
இருவருக்கு மட்டுமே புரியுமது!

இருவரையும் இருவேறு துருவங்களில் வீசியெறிந்தாலும்
தூரம் என்பதேது?
ஒருவர் விழிகளுள் மற்றொருவர்
முகவரி மாற்றிக்கொண்ட பிறகு
இனி அவர்களைப் பிரிக்க என்ன இருக்கிறது?

இருவரும் தனிமனிதர்கள் அல்ல
இரண்டு ஏகாந்தப் பயணங்களுமல்ல
இரு துண்டிக்கப்பட்ட உலகங்களுமல்ல
ஒரே பார்வை நிரப்பிக்கொண்ட நான்கு விழிகள்
அப்பார்வையின் பெயர் என்ன?

# ஒரு குடிசையின் கதை

**தேவிப்ரியா**

இந்தக் குடிசையில்தான்
என் உலகம் உதித்தது!

இக்கூரையினின்று உதிர்ந்த
மண்நிற மழைத்துளியில்தான்
என்னுருவம் எனக்கு முதன்முதலாய்
தெளிவாய்த் தெரிந்தது!

ஊரும்பேரும் தொலைத்தபின்னும்
இன்னும் மிச்சமான
இவ்வேப்ப மரத்தடியில்தான்
என் எழுத்துக்குருத்து துளிர்த்தது!

இத்தாழ்வாரத்தில் விரிந்திருந்த
என் புத்தகப் பக்கங்கள் மீது
எங்கள் கோழிக்குஞ்சின் மலம்பார்த்துதான்
வண்ணங்கள் ரகசியம் புரிந்தது!

முழங்காலளவுச் சேற்றில்
எங்கள் வீட்டிலிருந்து சாலைக்கு
நடந்தபோதுதான்
இவ்வுலகின் ஆழம்
முதன் முறையாய்க் கலவரப்படுத்தியது!

மண்சுவர்களில் முதன்முறையாய்
ஆள்காட்டிவிரலால் எழுதியபோதுதான்
எழுத வேண்டியதன் தேவை தெரியவந்தது!

இக்குடிசையின் காவல்கண்ணாய் ஒளிர்ந்த
சிம்னி விளக்குதான்
முதன் முறையாய் என்னை இருட்டுக் கிணற்றுள்
எட்டிப் பார்க்கத் தூண்டியது!

புகையிலைத்தொழிற்சாலை சங்கொலி கேட்டு
எங்கள் அம்மா பதறிக்கண்விழித்தபோது
இக்குடிசையில்தான் முதன்முறையாய்
காணாத கண்ணீர்க் கடல்கள்
பொங்கியெழுந்தபடி தென்பட்டன!

அப்போதுதான் முதன்முறையாக
இக்குடிசை மீது போர்த்திய தர்ப்பைக்கற்றைகள்
ஈட்டிகளாய் மாறாதா என்றிருந்தது!

எங்கள் அம்மா ஆணையாய்
அந்நாளிலிருந்து எங்கள் குடிசை
என் கண்களுக்கு
ஆயுத பூஜை நடத்திக்கொள்ளும்
முனீஸ்வரன் கோவிலாய்த் தெரிகிறது!

# வலைக் குழந்தைகள்

பிரம் சுந்தர்ராவ்

ஞாயிற்றுக் கிழமை வந்தால் போதும்
ஹாஸ்டல் கதவுகள் விரிந்து திறந்து கொள்ளும் -
ஒரு வாரகாலமாய் ஓய்வு ஒழிவின்றி
படிப்பு யுத்தம் நடத்திய கண்கள்
கதிரவன் உதிக்கும் முன்பே உறக்கத்தினின்று எழும்
விடிந்ததும் விடியாததுமாய் குளியலாகி சிற்றுண்டியாகி
முன்வாசலை அடைந்துவிடும்
நடந்து வரும் பாச பந்தங்களுக்காக
நயாகராக்களாய் துள்ளிக்கொண்டிருக்கும்!

அம்மா அப்பாவைக் கண்டதும்
வீடே பெயர்ந்து வந்த ஆனந்தம்
அம்மா செய்த பலகார மணம்
வாசல் அருகிலேயே குப்பென பரிமளங்களை அனுப்பும்
அம்மா கை இனிப்பில்
அத்தனை நாட்கள் சோர்வனைத்தும் மாயமாகும்
அப்பாவின் அன்பு மிகு அறிவுரைகளில்
கடமை கண் முன் வந்து நிற்கும்!

அன்பும் அரவணைப்பும்
அந்த பன்னிரண்டு மணி நேரத்திலேயே
அந்திமிடம் வரை
ஆனந்தத்தைக் கண் முன் ஊற்றிய காலம்
இதோ முடிந்துகொண்டிருக்கிறது
என்ற கவலை துரத்தும்
அதுவரை

அனுராகங்களை மிருதுவாய் மீட்டிய கரங்கள்
குரூரமாய் 'டாட்டா' காட்டியவாறு
'ரேங்க்' வரணும்' என்றபடி வாசற்கதவு தாண்டுகின்றன.

வருகை தராத பெற்றோருக்காக
காத்துக் கொண்டிருந்த கண்கள்
கண்ணீர்க் கால்வாய்களாய் தாழ்வாரமெல்லாம்
பாய்கின்றன
குறைந்த பட்சம்
அந்த ஒரு நாளாவது
தனக்காகவும்
தன் ஸ்பரிசத்திற்காகவும்
வர முடியாத அம்மா அப்பாவை நினைத்து
மரத்தடியில் நின்று பரிதாபமாய் பார்த்துக்
கொண்டிருக்கும்!

விகசிக்க வேண்டிய இளம் குருத்துக்கள்
அழுகையை விழுங்கிக் கொண்டு
ஏதோ குற்றத்துக்கான தண்டனை போல் இங்கு
சிறைவாசத்திற்கான அடையாளங்களாய் நிற்கின்றன
தாள்களாய் இமைகளைத் துடைத்துக்கொள்கின்றன
கசாப்பு இதயங்களின் குரூரத்தை அளக்கின்றன!

மளிகைக் கடைகளாக
பெட்டிக் கடைகளாக
தெருவுக்குத் தெரு முளைத்த வியாபார மையங்களில்
ஆடல் பாடல்களை மறந்து
இளம் இதயங்கள் மிருதுவான உணர்வுகளைத்
தொலைத்து விடுகின்றன!

தேய்ந்து போன சந்தனத் துண்டுகளாய் காய்ந்துபோய்
வாழ்வின் பரிமளங்களைப் புறக்கணிக்கின்றன
கல்வியில் பிறந்து
கல்வியிலேயே வளர்ந்து
கல்விச் சந்தையில் பலியாடுகளாகின்றன!

# கத்தி முனையில் கடவுள்

அத்தேபல்லி ராம் மோகனராவ்

மதத்தின் கால்கள் மக்கள் தலைமீதிருக்க
வேர்கள் மட்டும் அரசியல் கன்னத்தில் ஊன்றியுள்ளன
அது அரசியலென்று வெளிப்படுத்தாமலிருப்பதே
அரசியல்வாதிகளுடைய அரசியல்!

மக்களுடைய மண்டைகளைப் புதைத்து
பதவி மரங்களை முளைப்பித்துக் கொள்பவர்களுக்கு
மதம் புனித சம்பிரதாயமாகவே தென்படும்!

உபவாச குகைகளில் தெய்வத்தைத் தேடும் பூசாரிக்கு
மட்டும்
மதம் சிங்கம் நழுவ விட்ட எலும்பாய்த் தெரியும்!

மனிதனின் தன்மை மனோ மந்திரத்தில்
அமைதி அருவியாக உள்ள மதம்
கூட்டத்திற்குள் ஓடி
மலினங்கள் நிறைந்த வெள்ளமாய் மாறும்!

விமானமெனத் திரியும் தலைவருக்கு
காசு சம்பாதித்துத் தரும் வரமாய் மாறும்
அதுவரை அடுத்தவர் கண்ணீரில்
கடவுளைக் காட்டிய மனிதன்

கொள்ளைக்காரன் கூச்சல் கேட்டதும்
கண்ணீரின் அர்த்தமே மறந்து போவான்!

அடுத்தவன் இதயத்தை
நம்பிக்கைக் கத்தியால் குத்தி
தெய்வத்தை வெளியில் கொண்டுவரத் துடிப்பான்
கழுத்து அறுபட்ட மனிதன்
குரல் எழுப்பிய உதிர நதிகளில்
நிசப்தமாய் நிழல் பார்த்துக்கொள்கிறான்
மதம் சொர்க்கத்திற்கு மார்க்கமென
பாவிக்கும் கொலைகாரன்
நரகத்திற்கு வழி தேடிக்கொள்கிறான்
மதம் வர்க்கத்திற்கான வழியாய்ப் பாவிக்கும் மனிதன்
தரையில் சொர்க்கத்தை இறக்குகிறான்!

# இளம் குருத்தின் இதயகீதம்

நந்தினி சீதாரெட்டி

என்னைத் தெரியவில்லையா சார்?
பொத்தானில்லாத கந்தல்சட்டை
எண்ணெயும் புழுதியும் படிந்த கறுப்பு டிரவுசர்
அழுக்குமுகம் கரடுதட்டிய கைகள்
உங்களால்கூட என்னை அடையாளம்
காணமுடியவில்லையா சார்?

உண்மைதான்...
வாழ்க்கை என்னைச் சபிக்காமலிருந்திருந்தால்
உங்கள் 'சன்னி'யுடன் கிரிக்கெட் ஆடவேண்டியவன் நான்
உங்கள் 'சுஜ்ஜி'யுடன் கான்வெண்ட்
செல்லவேண்டியவன்!

சூறாவளி வீசாமலிருந்திருந்தால்
அம்மா கைச்சோறு சாப்பிட்டு
துள்ளித்திரிய வேண்டியவன்
இன்னும் என்னைத் தெரியவில்லையா சார்?

நீங்கள் அவசரமாய் வி.ஐ.பி. மீட்டிங் கிளம்புகையில்
டிராஃபிக் சிக்னல்விழுந்து எரிச்சலுற்றபோது
உங்கள் கார்கண்ணாடி துடைத்து
எட்டணா யாசித்தவன்
அதற்குள் மறந்துவிட்டீர்களா சார்?

நீங்கள் அழகாய் ஆபீஸ் புறப்படுகையில்
உங்கள் பூட்ஸுக்கு பாலிஷ் போட்டு
நாலணாவுக்காகக்கெஞ்சிய
ஆதரவற்ற அனாதை!

இரானி ஓட்டலில் பிளேட்டுகள் எடுக்கையில்
பேண்ட்மீது சிந்திய டீத்துளிக்காக
உங்கள் அசிங்க வசவுகளை வாங்கிக்கட்டிக்கொண்டவன்!

கை நழுவி டீ கப் உடைந்தபோது
உங்கள் கண்முன்னே மீசைக்கார முதலாளியால்
கன்னத்திலறையப்பட்டவன்!

நான் சார், சின்னப்பையன்
கிள்ளுவதற்கு கன்னம் இல்லாதவன்
அணைப்பதற்கு அம்மா அற்றவன்
மூட்டை தூக்குகிறவன் கல் சுமப்பவன்
ஸ்க்ருக்கள் ஸ்பானர்களை மெக்கானிக்கிற்கு
எடுத்துத்தருபவன்
பேருந்து நிலையங்களில் பழம் விற்பவன்
ட்ராஃபிக் ஜங்ஷனில் தினசரி விற்பவன்

அச்சகங்களில் 'க்யாலி' சுமப்பவன்
கக்கூஸ்வாளிகளில் நீர் நிரப்புபவன்
காபிகொடுத்து தேனீர் கொடுத்து
தேனீராய்க்கொதித்து ஆறிப்போனவன்!

நான் குழந்தைத் தொழிலாளி
பால்யம் தொலைத்த பாலகன்
வேலை நிறுத்தம் தெரியாத கூலி
நீங்கள் ஏன் இனம்காணப் போகிறீர்கள்?
அடையாளம் காண கிழிந்த சொக்காய் தவிர
வேறெந்த அடையாளமுமில்லாதவனல்லவா!
அடையாளம் தெரிய கண்ணீர்த்துளிகள் தவிர

வேறு முத்திரை இல்லாதவனாயிற்றே!
உங்களால் முடியாததுதான் சார்
வெளிறிய அசிங்கமுகத்தில்
பரிதாபப்பட என்ன இருக்கிறது சார்?

நீங்கள் காலிசெய்து எறிந்த
பாட்டில்களுக்கான சண்டையில்
சட்டை கிழித்துக்கொண்டவன்
கோலிஆட வேண்டிய வயதில் கேலிக்காளாகியவன்
பலபம் பிடிக்கவேண்டிய கையால் பாத்திரம் துலக்குபவன்
பள்ளி செல்லவேண்டிய பருவத்தில் பசு மேய்ப்பவன்
பசுக்கள் கொட்டகையினின்று தப்பியோடி விட்டால்
எஜமானரிடம் அடி உதை வாங்குபவன்
பாரம் சுமக்க முடியாத கூடை கூலிக்காரன்
உங்கள் சைக்கிளுக்குக் காற்றடிப்பவன்
எவ்வளவு காற்றடித்தும் மனிதர்களுக்குக் காற்றடிக்க
கற்றுக்கொள்ளாதவன்
எத்தனை பங்க்சர்களை ஒட்டினாலும்
என் பங்க்சர் ஒட்ட வைக்க முடியாதவன்!

உங்கள் பிள்ளை ஐஸ்கிரீம் தின்பதற்காக
நான் ஐஸ்கிரீமாய்க் கரைந்து கொண்டிருக்கிறேன்
தீபாவளிக்கு உங்கள் செல்லப் பிள்ளை
மத்தாப்பு கொளுத்துவதற்காக
சிவகாசியில் மத்தப்பாய் பொசுங்கிக்கொண்டிருக்கிறேன்
உங்கள் வாழ்க்கை வசதிகளுக்காக
திருகாணியானவன்
நான் குழந்தை அல்ல... கடந்த ஜென்மக் கொத்தடிமை!
வெட்டிவேலைகளுக்காகவே பிறவியெடுத்தவன்
தர்மபூமியில் தருமத்திற்குக் கொடுப்பினையற்றவன்
பிச்சையெடுப்பவர்மீது பரிதாபம்காட்டும் நீங்கள்
கடலை விற்கும் என்னோடு வம்பு செய்வீர்கள்!

எனக்கு யூனியன் இல்லை, கொடிகளில்லை
கட்சிகளில்லை, ஓட்டுகளில்லை.. தேர்தல்களில்லை
தேர்தல்களுக்கு
உங்கள் எலக்ஷன்களுக்கு நான்தான் 'ஜே' போடவேண்டும்
உங்கள் கல்யாணங்களுக்கு நான்தான்
மாலை கட்டவேண்டும்
ஆனாலும்... 'நான்' என்றால் உங்களுக்கு அருவெறுப்பு
நீங்கள் ஒதுக்குவது போலவே வாழ்க்கையும்
ஒதுங்கிவிட்டது
ஆனாலும் சார், வாழ ஆசை இல்லாமல் முடிகிறதா?

உதடுகளெல்லாம் பற்கடிகள் சார்
கண்கள் உதிர்ந்து கிழிந்த சட்டையில் விழுந்தால்
எல்லாம் நாசமல்லவா?
இனி எங்கே கண்ணீர்??

வருஷம் முழுக்க வசவுகளும் சாபங்களும்...
வாழ்க்கையே சாபக்கேடாகிவிட்டது
கனவுக்குமிழ்கள் வெடித்து கைப்பிடியினின்று
நழுவும்போது
சுற்றிலும் இருட்டுதானே -
பால்யமே வயோதிகமாகிவிட்டபோது
இனி ஏது அடையாளங்கள்??

என்னை அடையாளம் கண்டால்
உங்கள் அடையாளம் தலைகீழாகிவிடும்
அதனால்தான் சார்,
நீங்கள் என்னை அடையாளம் காணமாட்டீர்கள்
மாட்டவே மாட்டீர்கள்!

## பசுமைத் தாம்பத்தியம்...

**மஹெஜபீன்**

நான் மசூதி, அவன் கோவில்
எங்களுக்கு ஒரு ஏசுநாதர் பிறந்தார்
அயோத்யா எப்போதும் எங்களுக்குப்
பிரச்னை ஆனதில்லை
எங்களுக்குப் பிரச்னை ஆகாமலிருப்பதே
அவர்களுக்குப் பிரச்னையாகி விட்டது

காற்று வார்த்தைகளைச் சுமந்து வருகின்றது
மனம் கரைந்து கண்ணீர்க் குளங்களாகின்றது
பார்வைகள் கேள்விகளெழுப்புகின்றன
உடல் காயமடைகிறது
காயங்களிலிருந்து வாழ்க்கையைக்
காப்பாற்றிக்கொண்டேன்!

ஜாதியை வீட்டிலேயே விட்டு
மதத்தை மறந்துபோய்
அவனுடன் வெளியுலகில் அடிவைத்து
புது சமுதாயத்திற்காகக் கனவு கண்டேன்
அப்போது தெரியவில்லை...
மதம் நிழல் போல் துரத்துகிறது
சம்பிரதாயங்கள் என்னை வேட்டையாடுகின்றன!

தாலியும், பொட்டும் இல்லாதது
ஒரு குரூரமான சங்கதியாக விமர்சிக்கப்பட்டது

கணவனைக் கடவுளாய்ப் பாவிக்காமல்
சிநேகிதனாய் அன்பு செலுத்துவது
உலக அதிசயங்களுள் ஒன்றானது
தாம்பத்தியம் என்ற பெயரில்
அடித்துக்கொண்டும், திட்டிக்கொண்டும்
அன்றாடம் படுத்துக்கொண்டும்...
ஒருவருக்கொருவர் பாரமாய்...

இத்தகைய வாழ்க்கையைக் கொஞ்சம் தவிர்த்து
இருவரும் அவ்வப்போது சந்தித்துக்கொண்டு
எவர் வாழ்க்கையை அவர் வாழ்வது
அவர்களுக்கு விளங்காத விஷயம்!

எனக்கு 'ஆதர்ச தாம்பத்தியம்' எனும்
'நோபல் பரிசு' தேவையில்லை.

# இந்நூலாசிரியரைப் பற்றி...



***சாந்தா தத் :*** முப்பது வருடங்களாய் ஹைதராபாத் வாழ்க்கை. வெகுஜனப் பத்திரிகைகளிலும் - இலக்கியப் பத்திரிகைக்ளிலும் நூற்றுக்கும் மேற்பட்ட சிறுகதைகள்... அவ்வப்போது கவிதைகள், கட்டுரைகள் பிரசுரமாகியுள்ளன. தவிர இருபத்தைந்து சிறுகதைகள் மற்றும் நூற்றுக்கும் அதிகமான கவிதைகள் தெலுங்கிலிருந்து தமிழுக்கு மொழியாக்கப்படைப்புகள் 'உயிர்ப்பு' எனும் சிறுகதைத் தொகுப்பு, 'தெலுங்கானா சொல்லும் கதைகள்' எனும் மொழியாக்கச் சிறுகதைத் தொகுப்பு என இரு சிறுகதை நூல்கள் வெளிவந்துள்ளன. லில்லி தேவசிகாமணி இலக்கியப் பரிசு, இராஜாஜி சிறுகதைப் பரிசு, தாஸ்னா மொழியாக்கப்பரிசு, சேவ் (SAVE) குழந்தைத் தொழிலாளர் ஒழிப்பு சிறுகதைப் பரிசு மற்றும் வெகுஜனப் பத்திரிகைகளில் சிறுகதைப் போட்டிகளில் பரிசுகள்.

**B. Shantha Dutt**
1-1-564/1, New Bakaram, Hyderabad - 20.



***டாக்டர் நலிமெல் பாஸ்கர் :*** ஆந்திரப் பிரதேசத்திலுள்ள கரிம் நகரில் அரசு கல்லூரியில் தெலுங்குப் பேராசிரியராய் பணிபுரியும் இவர் பதினெட்டு வயதில் 'ஏ மனிதனே.!', 'ஓ... மானவுடா' எனும் தன் முதல் தெலுங்குக் கவிதை நூலை வெளியிட்டார். 'முப்பது நாட்களில்... மொழி' என்ற புத்தகங்கள்மூலம் பதினான்கு இந்திய மொழிகள் கற்று பதினோரு மொழிகளினின்று நேரடியாய் தெலுங்கிற்கு அநேக படைப்புகளை மொழிபெயர்த்திருக்கிறார். 1993-ல் கடந்த நூற்றாண்டின் பத்து சிறந்த மலையாளக் கதைகள், 1996-ல் 'கண்ணாடியில் காந்தாகி' ('அத்தம்லோ காந்தாகி') எனும் தலைப்பில் ஐந்து மொழிகளளின் பதினோரு தெலுங்கு மொழியாக்கக் கதைகள்... இப்படி பல நூல்கள் வெளியிட்டுள்ளார். தெலுங்கு யூனிவர்சிடியின் சிறந்த மொழிபெயர்ப்பாளர் விருது(1997), கலா சாகர் விருது(1998), கலா ஜோதி அவார்ட்(1999) என அநேக விருதுகள் பெற்றுள்ளார். தெலுங்கு, தமிழ், கன்னட, மலையாள இலக்கியங்களில் M.Phill., Ph.D., செய்திருக்கிறார்.

**Dr. Nalimel Bhaskar** (Jr. Lecturer)
7-2-73 Mankamma Thota
Karim Nagar - 505 001, (A.P.)

மலர் பிரிண்டர்ஸ் 044-8224803